27th September 1958]

On verification I found that the number of agriculturists in Vellore taluk who were granted loan out of the number of agriculturists who applied for the loan under the Intensive Manuring Scheme was 11 out of 18 in respect of paddy and 17 out of 62 in respect of sugarcane.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asteristic (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS PANCHAYATS BILL, 1958 (L.A. BILL NO. 33 OF 1958)—*cont.*

MR. SPEAKER : Now we will continue the clause by clause consideration of the Panchayats Bill. We have finished consideration of clause 35. We will now take up clause 36.

*Clause 36.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, I move—

" *Renumber* clauses 37 to 42 as clauses 36 to 41 respectively and after clause 41 as renumbered *insert* clause 36 as clause 42 ".

The amendment was put and carried.

*Clause 36 as renumbered.*

MR. SPEAKER : The motion is—

' that clause 36 do stand part of the Bill '.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

' In item (*a*) of sub-clause (3), in line 39, *omit* the word ' and ' and *add* the following, namely :—

' (*b*) control all the officers and servants of the panchayat union council, and '; *renumber* item (*b*) as item (*c*).

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

' In sub-clause (3), after item (*b*), insert the following :

(*c*) control all the officers and servants of the panchayat '.

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I also move the other amendment, namely :

" In sub-clause (3), *after* item (*b*), *add* the following, namely :

' (*c*) control all the officers and servants of the panchayat union council '."

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Mr. Speaker, Sir, I move :

' In sub-clause (4), *add* at the end the words and send confidential reports of the commissioner to the Inspector or Government '?

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Mr. Speaker, Sir, I move :

" In sub-clause (2), *for* the words ' The chairman and vice-chairman ', *substitute* the words ' The chairman and the vice-chairman '."

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, I move :

" In clause 36 as renumbered :

(i) in sub-clause (2), *for* the words ' and vice-chairman ', *substitute* ' and the vice-chairman ' and *omit* ' other than ex-officio members ' ;

(ii) in sub-clause (3) (*b*), after the words ' by this Act ' *add* ' and the rules made thereunder '."

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

10-20 a.m. * SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, சேர்மனுக்கு இருக்கக்கூடிய ஆபீசர்களையும், சிப்பந்திகளையும் நிர்வகிக்கக் கூடிய அதிகாரம் அவசியம் இருக்கவேண்டும். அந்த அதிகாரத்தை சேர்மனுக்கு கொடுக்காமல் எக்சிக்யூடிவ் ஆபீசருக்கு கொடுத்து, அவரையும் கட்டுப்படுத்த முடியாத நிலைமையில் சேர்மன் இருந்தால் நிர்வாகம் ஒழுங்காக சீராக நடைபெறாது. சேர்மன், வைஸ் பிரஸிடெண்ட் எல்லோரும் வெறும் பொம்மையாகத்தான் இருப்பார்கள். ஆகவே இந்த முறையில் செய்யாது சேர்மனுக்கும், பிரஸிடெண்டுக்கும் அதிகாரம் அவசியம் கொடுக்க வேண்டுமென்பதுதான் என் திருத்தத்தின் நோக்கம். இதைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : என்னுடைய இந்த திருத்தத்தின் நோக்கம் இந்தச் சட்டத்திலேயே பஞ்சாயத்து சார்மன், யூனியன் கவுன்சில் சார்மென் இவர்களுக்கு அதிகாரத்தை திட்ட வட்டமாகக் கொடுக்கவேண்டும் என்பதுதான். அதற்காகத்தான் இதைக் கொடுத்திருக்கிறேன். அவர்களுக்குக் கீழ் வேலை செய்கிற சிப்பந்திகளை நிர்வகிப்பதற்கு உள்ள அதிகாரம் இல்லையானால் வெறும் மசோதாவை நிறைவேற்றி அதனால் பயன் இல்லாமல் போய்விடும். பொதுமக்களுடைய தேவையை அவ்வப்போது உணர்ந்து அவர்களால் செயலாற்ற முடியாமல் போகும். இதனால் பொதுமக்களுக்கு அவர்கள் ஆற்றவேண்டிய பணியை சரியான முறையில் ஆற்ற முடியாது போகும். ஆகவே இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொண்டு திட்ட வட்டமாக அவர்களுக்கு அதிகாரத்தை வழங்க சர்க்கார் முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

27th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது பஞ்சாயத்து கவுன்சிலுக்கோ, அதன் தலைவருக்கோ, அல்லது எக்ஸிக்யூடிவ் ஆபீசருக்கோ எந்த முறையில் அதிகாரத்தைக் கொடுப்பது, யாரிடத்தில் அதிகாரம் இருக்க வேண்டும் என்பது பிரச்னை. தலைவரையே எக்ஸிச்யூடிவ் ஆபீசர் என்ற நிலையில் வைத்து அதிகாரத்தைக் கொடுக்கவேண்டுமா அல்லது, கமிஷனரைப் போட்டு அவரிடத்தில் எக்ஸிக்யூடிவ் ஆபீசர் என்ற முறையில் அதிகாரத்தைக் கொடுப்பதா என்கிற இந்தப் பிரச்னையைப்பற்றி பலமுறை விசாரித்து சார்மனே எக்சிக்யூடிவ் ஆபீசராக இருந்து பணியாற்றுவது என்றால் கஷ்டமாக இருக்கும். அதேசமயத்தில் கமிஷனர் எக்சிச்யூடிவ் ஆபீசராகப் பணியாற்றும்போது அவருக்கு மேல் தணிக்கை செய்வதற்கு பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்குப் போதுமான அதிகாரம் இருப்பதுடன் அந்த அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்கு ஒரு அமைப்பை ஏற்படுத்த வேண்டுமென்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். ஆகையால் பின்னே வருகிற விதிகளில் அந்த யூனியன் கவுன்சிலுக்கு வேண்டிய சிப்பந்திகளை நியமிப்பதற்கு—எக்சிக்யூடிவ் ஆபீசரே தன்னிஷ்டப்படி நியமிக்காது—ஒரு நியமனக் கமிட்டியை ஏற்படுத்தி அந்தக் நியமனக் கமிட்டியின் மூலமாக சிப்பந்திகள் எல்லோரையும் நியமிக்கவேண்டுமென்ற ஒரு திருத்தம் வரப்போகிறது.

[Deputy Speaker in the Chair.]

அதேமாதிரி முக்கியமாக யூனியன் கவுன்சிலிலே பெரும் அளவுச் செலவு கல்வித் துறையில் செலவாகப்போகிறது. அந்தக் கல்வித் துறைச் செலவை நல்ல முறையில் செய்வதற்கும், கல்வித் துறை வளர்ச்சியை நல்ல முறையில் கவனிப்பதற்கும் தனியாக ஒரு கமிட்டியை நியமித்து அந்தக்கமிட்டியின் பார்வையில் எக்சிக்யூடிவ் ஆபீசர் பணியாற்றவேண்டும் என்கிற திருத்தமும் வரப்போகிறது. மூன்றாவதாக, மற்றெல்லா விஷயங்களையும் கவனிப்பதற்காகவும் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அக்கமிட்டியின் பார்வையின் கீழ் எக்சிக்யூடிவ் ஆபீசர் பணியாற்ற வேண்டுமென்று ஏற்பாடு செய்யப் போகிறோம். ஆகையால், அந்த யூனியன் கவுன்சிலுக்கு இருக்கும் எல்லா விதமான வேலைகளும் அச்சபையின் பார்வையின் கீழ் நடத்தப்படுவதற்கான ஏற்பாட்டை நாம் செய்யவிருக்கிறோம். அப்படியிருக்கும்போது, தனிப்பட்ட ஒருவருக்கு அதிக அதிகாரத்தைக் கொடுப்பதை விட சபைக்கும் சபையினால் அமைக்கப்படும் கமிட்டிக்கும் அதிக அதிகாரங்களைக் கொடுப்பது தான் நல்லது என்று எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் ஒரு எக்சிச்யூடிவ் ஆபீசருக்குரிய அதிகாரங்கள் எல்லாவற்றையும் தலைவருக்குக் கொடுக்கவேண்டுமென்று கூறும் திருத்தங்களை வற்புறுத்த வேண்டாம் என்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

The amendments of Sri K. Sattanatha Karayalar, Sri A. Govindasamy and Sri S. Lazar were, by leave, withdrawn.

The Government amendment was put and carried.

Clause 36, as amended, was put and carried.

*Clause* AS *as renumbered.*

DEPUTY SPEAKER : The motion is—

'That Clause 37 do stand part of the Bill.'

SRI M. P. SUBRAMANIAM : Sir, I move—

"In sub-clause (2), *for* the words "the Revenue Divisional Officer shall, notwithstanding anything contained in this Act, or in the rules or notifications issued thereunder, be ex-officio member

[Sri M. P. Subramaniam] [27th September 1958

and chairman of the panchayat union council ", *substitute* the words " a temporary chairman may be elected from among the elected members of the panchayat union council ".'

SRI A. GOVINDASAMY : Sir, I second it.

DEPUTY SPEAKER : Now the clause and the amendment are before the House for discussion.

**SRI M. P. SUBRAMANIAM** : ஐயா, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிலே தலைவரோ துணைத் தலைவரோ, தலைமை தாங்க முடியாத நிலைமை ஏற்பட்டால், வேறு தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கு ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும், அவ்வாறு வேறு தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரையில் சபைக் கூட்டங்களுக்கு ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர் தலைமை வகிக்க வேண்டுமென்று, 37-வது பிரிவில் உள்ள ஒரு விதி கூறுகிறது. அந்தக் காலத்தில் தலைமை வகிப்பதற்காக ஒரு தற்காலிகத் தலைவரை, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டும் என்று என் திருத்தம் கூறுகிறது. அதாவது, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ஒருவர் அந்தக் காலத்தில் சபைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்க வேண்டும் என்பது என் திருத்தத்தின் நோக்கம். வேறு புதுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரையில் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசரே சபைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்கவேண்டிய அவசியமில்லை. சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களில் யாராவது ஒருவரை தலைவராக அவர் நியமிக்கலாம். அதற்கு ஏற்பாடு செய்வதில் பெரிய கஷ்டங்கள் இருக்காது. என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் அல்லது என் திருத்தத்தின் நோக்கத்தை பூர்த்தி செய்யக்கூடிய வேறு திருத்தத்தையாவது இப் பிரிவில் புகுத்த வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்தப் பிரிவில் நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியது என்னவென்றால், சபையின் புதிய அக்கிராசனர் தேர்ந்தெடுக்கப்படும் வரையில் இருக்கக்கூடிய காலம் ஒரு வாரம் அல்லது 15 நாட்களாகத்தான் இருக்கும். (2)-வது உப பிரிவில் என்ன சொல்லப் பட்டிருக்கிறது என்று பார்ப்போம் :

' When the office of the chairman is vacant and there is either a vacancy in the office of vice-chairman, or the vice-chairman has been continuously absent from jurisdiction for more than thirty days or is incapacitated, the Revenue Divisional Officer shall, after giving notice of not less than seven clear days to the members convene a meeting for the election of a chairman and until a new convene or vice-chairman is elected and assumes office or the vice-chairman returns to the jurisidiction or recovers from his incapacity as the case may be, the Revenue Divisional Officer shall, notwithstanding anything contained in this Act, or in the rules or notifications issued thereunder, be ex-officio member and chairman of the panchayat union council.

எனவே, ஒரு வாரம் அல்லது 15 நாட்களுக்குள் நடக்கக்கூடிய சபைக் கூட்டங்களுக்குத்தான் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் தலைமை வகிக்கமுடியும் என்று இந்த உபபிரிவிலிருந்து தெரிகிறது. கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். பி. சுப்ரமணியம் விரும்புவது போல், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் உறுப்பினர்களில் ஒருவரை தாற்காலிகத் தலைவராக ரெவின்யூ

27th September 1958] [Sri C. Subramanian]

டிவிஷனல் ஆபீசர் நியமிப்பதற்கு வகைசெய்யும் முறையில் இந்த உப பிரிவைத் திருத்தலாம். குறுகிய காலத்திற்கு ஒருவரை தாற்காலிகத் தலைவராக நியமிப்பதைவிட, ரெவின்யூ டிவிஷனல் ஆபீசரே தலைவராகப் பணியாற்றுவதுதான் நல்லது. மேலும், ஒரு உறுப்பினரை தாற்காலிக சேர்மனாக நியமிப்பதாவது, சில சமயங்களில், அவரைத்தான் சேர்மனாக தேர்ந்தெடுக்க வேண்டுமென்று சிபாரிசு செய்வது போல் ஆகிவிடும். குறுகிய காலத்தில், ரெவின்யூ டிவிஷனல் ஆபீசரே, " எக்ஸ்-அபிஷியோ, உறுப்பினராகவும் சேர்மனாகவும் இருப்பதில் தவறில்லை. மேலும், தாற்காலிக சேர்மனுக்கு அதிக அதிகாரங்கள் கிடையாது. எனவே, குறுகிய காலத்திற்கு ரெவின்யூ டிவிஷனல் ஆபீசரைச் சேர்மனாக நியமிப்பது குறித்து கனம் அங்கத்தினர்களுக்கு ஆக்ஷேபணை இருக்காது என்று நினைக்கிறேன். இந்தத் திருத்தத்தை வலியுறுத்த வேண்டாம் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். பி. சுப்ரமணியம் அவர்களைக் கேட்டுக்கொள் கிறேன்.

The amendment was put and lost.

Clause 37 was put and carried.

*Clause 38 as renumbered.*

DEPUTY SPEAKER : The motion is—

'That Clause 38 do stand part of the Bill.'

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரிவின் (3)-வது உப பிரிவில் " Every member shall have access during office hours to the records of the panchayat or the panchayat uuion Council as the case may be . . " என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ஆபீஸிலுள்ள எதாவதொரு ரெகார்டைப் பார்க்க ஒரு கவுன்சில் உறுப்பினர் விரும்பினால், அவர் நிர்வாக அதிகாரிக்கோ, கமிஷனருக்கோ தம் விருப்பத்தைத் தெரிவித்து அவருடைய அனுமதியைப் பெற்ற பிறகு ஆபீசுக்குள் சென்று அந்த ரெகார்டைப் பார்க்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது, நிர்வாக அதிகாரியோ, கமிஷனரோ அந்த உறுப்பினர் ரெக்கார்டைப் பார்ப்பதை அனுமதிக்காவிட்டால் அவர் ரெகார்டைப் பார்க்க முடியாது என்று அர்த்தமாகிறது. உறுப்பினர் ரெகார்டை பார்ப்பது, அந்த அதிகாரிகளின் இஷ்டத்தைப் பொறுத்ததாக ஆகிறது. அவர் ரெகார்டை பார்க்க வேண்டு மானால், அந்த அதிகாரிகளின் அனுமதியைப் பெற்றுத்தான் அதைப் பார்க்க வேண்டியிருக்கும். இப்படிப்பட்ட ஷரத்து, உறுப்பினர்களுக்கு ரெகார்டுகளைப் பார்ப்பதற்கு உள்ள உரிமையைக் கட்டுப்படுத்தக்கூடியது. ஆகவே இதிலுள்ள உறுப்பினர்களின் உரிமையைக் கட்டுப்படுத்தும் நிபந் தனையை நீக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள் கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலைச் சேர்ந்த எந்த ரெகார்டையும் பார்ப்பதற்குரிய உரிமை சேர்மனுக்கு இருக்கிறது. இதர அங்கத்தினர்களுக்கு இந்த உரிமை எந்த அளவிற்கு இருக்க வேண்டும் என்பதுபற்றி இப்போது விவாதிக்கப்படுகிறது. இப்போது, நாம் சட்டசபையை எடுத்துக்கொள்வோம். இந்த சபைக்கு சர்வ அதிகாரங்களும் இருந்தாலும்கூட, அரசாங்கத்தின் ஒவ்வொரு இலாகாவிற்கும் சென்று அங்கே இருக்கும் எல்லா ரெகார்டுகளையும் பார்ப்பதற்குரிய உரிமை இந்த சபையின் அங்கத்தினர்களுக்குக் கூட இல்லை. ஏனென்றால், சில தஸ்தாவேஜுகளிலுள்ள விஷயங்கள் வெளியில் சொல்லக்கூடியவையாக இருக்கலாம். சில தஸ்தாவேஜுகளிலுள்ள விஷயங்கள் வெளியில் சொல்லக்கூடாதவையாக இருக்கக்கூடும் ; அதாவது அவை வெளி யாருக்குத் தெரியக்கூடாதவையாக இருக்கக்கூடும். இத்தகைய உரிமைதான்

பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும். அதாவது சட்டசபை அங்கத்தினர்களுக்கு இருக்கும் உரிமையைப் போன்ற உரிமை அவர்களுக்கு பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் கொடுக்கப்படவேண்டும். எனவே தான் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் உறுப்பினர் ஒருவர் கவுன்சிலின் எந்த ஒரு தஸ்தாவேஜைப் பார்க்க விரும்பினாலும், அவர் தம் விருப்பத்தை கமிஷனருக்கோ, நிர்வாக அதிகாரிக்கோ தெரிவித்த பிறகுதான் அதைப் பார்க்க வேண்டுமென்றும், ஆனால் அந்த உறுப்பினரால் அந்த தஸ்தாவேஜு பார்க்கப் படுவதை அந்த அதிகாரி தடுப்பதற்கு உரிய காரணங்கள் இருந்தால், அவைகளை அந்த அதிகாரி எழுதிக்கொடுத்து அந்தப்படி தடுக்கலாம் என்றும் குறிப்பிட்டிருக்கிறோம். இதில் ஒரு நிபந்தனையை நாம் கவனிக்க வேண்டும். அதாவது, உறுப்பினர் தஸ்தாவேஜைப் பார்ப்பதை அதிகாரி தடுப்பாரானால், அதற்கு உரிய காரணங்களை அவர் எழுத்து மூலம் தெரிவிக்க வேண்டுமென்று நிபந்தனை விதித்திருக்கிறோம். எனவே, சரியான காரணங்கள் இருந்தால் தான் உறுப்பினருக்கு இந்த உரிமை மறுக்கப்படும். அதிகாரி சரியான காரணங்கள் இன்றி அவருக்கு இந்த உரிமையை மறுத்தால், அதிகாரியின் முடிவு தவறானது என்று தீர்ப்புச் சொல்லப்படுவதற்கு இடம் இருக்கிறது. ஆகையால் இந்தப் பிரிவு இப்படியே இருக்கலாம் என்றும், இதில் ஒரு திருத்தமும் செய்ய வேண்டியதில்லை என்றும் சொல்லிக் கொள்கிறேன்.

Clause 38 was put and carried.

*Clause 39 as renumbered.*

DEPUTY SPEAKER : The motion is—

'That Clause 40 do stand part of the Bill.'

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதுவரை இருந்துவந்துள்ள சட்டப்படி, முனிசிபல் தலைவர்களுக்கும் முனிசிபல் உப தலைவர்களுக்கும் மாதம் ஒன்றுக்கு 75 ரூபாய் வீதம் கார் அலவன்ஸ் கொடுக்கப்பட வேண்டும். கார் இல்லாதவர்கள் ஜட்கா வண்டி போன்ற வாகனங்களின் மூலம் அவர்களுடைய முனிசிபல் பிரதேசங்களைப் பார்வையிடுவதற்கு அவர்களுக்கு உதவும் முறையில் அவர்களுக்கு குறைந்தபட்சம் 50 ரூபாயாவது வாகன அலவன்ஸ் மாதந்தோறும் கொடுக்கப்படுவதற்கு அச்சட்டத்தில் வகைசெய்யப்பட்டிருக்கிறது. அதே மாதிரி, அச்சட்டத்தில், கார்ப்பொரேஷனிலும் இதர ஸ்தல ஸ்தாபனங்களிலும் இத்தகைய பதவிகளில் உள்ளவர்களுக்கு இந்தச் சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இன்று முனிசிபல் எல்லையை விட மிகப் பெரியதொரு எல்லையைக் கொண்டது, பஞ்சாயத்து யூனியன்
10–30 a.m. கௌன்சில். ஆகவே, இந்த நிலையில் தலைவர் எல்லாப் பிரதேசங்களையும் நேரில் சென்று பார்வையிட வேண்டுமானால் அவர் குறைந்தபட்ச வசதியுள்ளவராக இருந்தால்தான் ஒருவேளை அந்த எல்லையை பூராவும் பார்வையிட முடியும். அப்படி வசதியில்லாதவர்களாக இருந்தால் அதனால் பலவிதத்திலும் பாதகமான நிலைமை ஏற்படும். ஆகவே குறைந்தபட்சம் 50 ரூபாயாவது அவருக்கு அலவன்ஸாக ஏற்படுத்துவது நலம் என்ற எனது அபிப்பிராயத்தை சொல்லிக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : சேர்மன், வைஸ்-சேர்மென் இவர்களுக்கு பிராயணப்படி கொடுக்கவேண்டுமென்ற கருத்தையொட்டி, அவர்களுக்கு அதற்கு வகை செய்யவேண்டுமென்ற முறையில் கோதண்டராமன் அவர்கள் பேசினார்கள். 178-வது விதியின்கீழ் ரூல்ஸ் செய்ய, இதற்காக அதிகாரம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே, அவர்களுக்கு என்ன அலவன்ஸ் கொடுக்கவேண்டும் என்பது ரூல்ஸில் கொடுக்கப்படும்.

Clause 39 was put and carried.

27th September 1958]

*Clause 40 as re-numbered.*

DEPUTY SPEAKER : The question is—

" That Clause 40 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 40 as re-numbered—

(i) *for* sub-clause (1), *substitute* the following sub-clauses :—

' (1) A whole-time executive officer shall be appointed by the Government for every town panchayat '.

(ii) In sub-clause (2), *for* the words ' in the case of every panchayat not so notified and also in the case of any panchayat so notified, if there is no executive officer in charge' *substitute* ' in the case of every village panchayat '.

(iii) In sub-clause (3), *for* the words ' the Government ' *substitute* ' the panchayat and the Government '."

The amendment was put and carried.

Clause 40, as amended, was put and carried.

Clause 41 as renumbered was put and carried.

Clause 42 as renumbered (old clause 36) was put and carried.

*Clause 43.*

DEPUTY SPEAKER : The question is—

" That Clause 43 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" Omit item (*b*) in line 11, and renumber item (*c*) as item (*b*) ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : அமைச்சர் அவர்கள் சொல்லும் போது, தனிப்பட்ட நபர்களுக்கு அவ்வளவு அதிகாரம் கொடுக்கக் கூடாது என்று சொன்னார்கள். ஒவ்வொருவருக்கும், பிரெசிடென்ட்டுக்கும் ஒரு விதியிருக்கிறது. எக்ஸ்ஸிக்யூட்டீவ் ஆபீஸர் இன்னின்ன செய்யவேண்டுமென்று விதி வகுக்கப்பட்டிருக்கிறது. அதேபோல் சிப்பந்திகள் இன்னின்ன வேலைகள் செய்ய வேண்டுமென்று விதி வகுக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்கும்போது, ஒவ்வொருவருக்கும் விதி வகுக்கப்பட்டிருக்கும்போது, ஒருவரை நீக்கவோ அல்லது அவர் மேல் நடவடிக்கை எடுக்கவோ அதிகாரம் பிரசிடென்டுக்குத்தான் இருக்க வேண்டும், சேர்மனுக்குத்தான் இருக்கவேண்டுமென்பது எனது திருத்தம். அதை எற்றுக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : முன்பு, சேர்மனைப் பொறுத்தவரையில் இந்த அதிகாரம் கொடுக்கவேண்டுமென்ற திருத்தம் நிராகரிக்கப்பட்டு விட்டது. இது, ஒரு இடத்தில் இருந்துதான் ஆகவேண்டும். " Control all the officers and servants of the panchayat " என்பது, எந்த முறையில் செய்யவேண்டுமென்பது பற்றி, பின்னால் திருத்தங்கள் வருகிறது.

The amendment was put and lost.

Clause 43 was put and carried.

*Clause* 44.

DEPUTY SPEAKER : The motion is—

" That Clause 44 do stand part of the Bill ".

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" In sub-clause (4), *omit* item (*e*), and renumber item (*f*) as item (*e*) ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" Omit item (*e*) of sub-clause (4) and *renumber* item (*f*) as item (*e*) ".

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 44, *renumber* sub-clause (5) as sub-clause (6) and *insert* the following as sub-clause (5) :—

' (5) Notwithstanding anything contained in sub-section (2) of section 11 and subject to all other provisions of this Act and the rules made thereunder, the panchayat union council shall have power to issue such specific directions as it may think fit regarding the performance by the Commissioner of any of the functions assigned to him under this Act :

Provided that where such directions relate to any National Extension Service Scheme of Community Development or any other scheme specially entrusted by the Government to the panchayat union council the directions issued by the council shall be in conformity with the terms and conditions of such entrustment '."

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : Sir, I press my amendment.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I oppose the amendment.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri K. Sattanatha Karayalar withdrawing his amendment?

SRI K. SATTANATHA KARAYALAR : No, Sir.

The amendments of Sri K. Sattanatha Karayalar and Sri N. K. Palanisami were put and lost.

The Government amendment was put and carried.

Clause 44, as amended, was put and carried.

27th September 1958]

*Clause* 45.

DEPUTY SPEAKER : The motion is—

"That Clause 45 do stand part of the Bill."

SRI M. JAGANNATHAN : Sir, I move—

"In the clause, *after* the words 'in cases of emergency direct the execution of any work' in lines 26 and 27, *insert* the words 'after informing the president or the chairman, as the case may be'."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In line 27, *after* the word 'direct' *insert* the words 'in consultation with the president or the chairman as the case may be'".

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

"In the proviso *omit* item (*b*) and *re-number*".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

* SRI M. JAGANNATHAN : Sir, clause 45 confers certain emergency powers on the executive authority and the commissioner to do any act or to execute any work which requires the previous permission of the panchayat without even consulting the president of the panchayat or the chairman of the council, as the case may be. My amendment says that the president of the panchayat or the chairman of the council should be at least informed. If the word 'informed' is not palatable to the Hon. Finance Minister, he may say 'at least in consultation with the president or the chairman as the case may be'. I hope the Government will accept my amendment.

* **SRI K. SATTANATHA KARAYALAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் இதில் கொடுத்திருக்கக்கூடிய திருத்தமானது, 10-40 a.m.
நிர்வாக அதிகாரி செலவு செய்துவிட்டு அதன் பின்னுல் கௌண்ஸிலில் அல்லது பஞ்சாயத் போர்ட்டில் ரிப்போர்ட் செய்யவேண்டும் என்றிருப்பதை எடுத்துவிட வேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். இவ்விதம் செலவு செய்துவிட்டு பின்னுல் சபைக்கு தெரியப்படுத்திஞல் போதும் என்று இருப்பது சரியல்ல. செலவு செய்வதற்கு முன்னுல் சேர்மன் அனுமதி பெற வேண்டும், அல்லது அதன் பின்னுலாவது சேர்மன் அனுமதி அல்லது சபையின் ஸாங்ஷன் வாங்கவேண்டும் என்று இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI N. K. PALANISAMI :** ஸார், மெம்பர்கள் பஞ்சாயத் போர்டிலோ அல்லது பஞ்சாயத் கவுண்ஸிலிலோ இருக்கும்போது அவர்களுடைய தனிப்பட்ட முறையில் இன்டரஸ்டு சம்பந்தப்பட்ட காரியங்களில் [illegible] இருந்தால் பங்கு கொள்ளக்கூடாது என்றிருக்கிறது. இவ்விதம்

இருப்பதை பார்க்கும்போது ரிக்கார்டு ஒன்றும் இல்லாவிட்டால் யார் பேரிலும் என்ன வேண்டுமானாலும் சொல்லி அவர்களை கலந்துகொள்ளக் கூடாது என்று சொல்லிவிடுவார்கள். ஆகவே ரிக்கார்டு பூர்வமாக இருந்தால்தான் கலந்து கொள்ளக்கூடாது என்ற முறை இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI T. SAMPATH : Sir, the hon. Member Sri Palanisami is not correct. This relates to the emergency powers of the executive authority. . .

DEPUTY SPEAKER : The Hon. Minister will reply. So, the hon. Member need not take the trouble of replying.

SRI V. K. KOTHANDARAMAN : உதவி சபாநாயகர் அவர்களே, அவசர காலத்தில் அதிகாரி எந்த அளவுக்கு வேண்டுமானாலும் செலவு செய்துவிட்டு, அதற்காக வேண்டிய பணத்தை ஒதுக்கலாம் என்றும், பின்னால் செலவு செய்துவிட்டு கமிட்டிக் கூட்டத்தில் வைத்து அதனுடைய காரணங்களை தெரிவித்தால் போதும் என்று இருக்கிறது. இப்போதும் முனிசிபாலிட்டிகளில் இருக்கக்கூடிய ஒரு விதிதான் இது. அதை மாற்றக்கூடிய நிலைமை இப்போது இல்லை. ஆகவே நாம் ஜனநாயக முறைப்படி செயல்படவேண்டும் என்று திட்டமிட்டு இந்த சட்டத்தை கொண்டுவருகிற நாம், இந்த விஷயத்தில் கமிட்டிக் கூட்டத்தில் கொண்டு வந்து தெரிவித்தால் மட்டும் போதாது, இம்மாதிரியான செலவுகளுக்கு தலைவரோடு கலந்து அவர்களின் அனுமதி பெற்ற பிறகுதான் பணம் செலவு செய்யவேண்டும் என்ற முறையில் இது அமைந்திருக்க வேண்டும் என்கிற அபிப்பிராயத்தை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : ஐயா, இந்தப் பிரிவின்கீழ் நிர்வாக அதிகாரியோ, கமிஷனரோ தங்களுக்கு அவசரம் அல்லது அவசியம் என்று எண்ணக்கூடிய நேரத்தில் சில காரியங்களை செய்துவிட்டு பின்னால் பஞ்சாயத்திலோ, அல்லது பஞ்சாயத் கவுன்ஸிலிலோ தெரிவித்தால் போதும் என்றிருக்கிறது. இவ்விதம் இதைப்பற்றி தெரிவித்தால் போதும் என்றிருக்கிறதே தவிர அனுமதி பெற வேண்டும் என்று இல்லை. அதிலும் அவர் செலவு செய்யக்கூடிய நிதி பஞ்சாயத் நிதியிலிருந்துதான் கொடுக்கவேண்டியிருக்கிறது. இவ்விதம் பஞ்சாயத்தின் பணத்தை எடுத்து செலவு செய்யலாம் என்று சொல்லிவிட்டு இதற்கு பஞ்சாயத்தின் அனுமதி பெற வேண்டும் என்று சொல்லவில்லை. இவ்விதம் பணம் செலவு செய்ததை பஞ்சாயத்தில் அல்லது பஞ்சாயத் கவுன்ஸிலில் கொண்டுவந்து அந்த செலவுக்கு அனுமதி பெறவேண்டும், அல்லது ஒப்புதல் பெறவேண்டும். அவ்விதம் ஒப்புதல் கொடுக்கக்கூடிய நிலை இல்லையென்றால் அதை மேல் அதிகாரிக்கு அனுப்பி இவ்விதம் செலவு செய்தது சரிதானா என்பதை பரிசீலனை செய்வதற்கு வழிவகை செய்யலாம். இவ்விதம் பரிசீலனை செய்யவேண்டும். ஐ.எல்.பி. யாக இருக்க வேண்டும். என்று வேண்டுமானால் வைத்துக்கொள்ளலாம். அப்போது இந்த விதி பொருத்தமானதாக இருக்கும், பஞ்சாயத்து அல்லது பஞ்சாயத் யூனியன் களுக்கும் பொறுப்பாகவும் இருக்கும் என்பதை நான் வலியுறுத்திக் கூறிக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : சட்டமன்ற உப தலைவர் அவர்களே, நிர்வாக அதிகாரியோ கமிஷனரோ என்ன அவசியத்திற்காக செலவு செய்வதாக இருந்தாலும் உள்ளூரிலேயே இருக்கும் தலைவரிடத்தில் கலந்து அனுமதி பெற வேண்டும் என்று இருந்தால்தான் எக்ஸிக்யூட்டீவ் ஆபீஸர்களுக்கு தங்கள் இஷ்டப்படி செலவு செய்வதற்கு சந்தர்ப்பம் இருக்காது. அவசர காரணங்களுக்காக செலவு செய்யலாம் என்று இருந் தால் நிச்சயமாக இதில் தவறுகள் வராமல் இருக்காது. ஆகவே, தலைவ ருடைய அனுமதியை பெற்றுதான் செலவு செய்ய வேண்டும் என்றுள்ள நிபந்தனை இருக்கவேண்டும். அதல்லாமல் செல[illegible] களில் கொண்டு வந்து தெரிவித்தால் போது[illegible]

27th September 1958] [Sri A. Govindasamy]

பல தவறுதல்கள் இதனுல் ஏற்படக்கூடும். ஏனென்றுல் 47-வது பிரிவு பிரகாரம் 60 நாட்களுக்கு ஒரு தடவை கூட்டம் கூட வேண்டும் என்று இருக்கிறது. ஆகவே இதைப்பற்றி தெரிவிப்பதற்குக்கூட தாமதம் எற்பட்டு விடும். ஆகவே தலைவருடைய அனுமதி பெற்றுதான் செலவு செய்ய வேண்டும் என்றுள்ள முறை இருக்கவேண்டும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI J. MATHA GOWDER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த செக்ஷனில் அவசியமான சந்தர்ப்பங்களில் எக்ஸிக்யூட்டீவ் ஆபீஸர்கள் பஞ்சாயத்து தலைவர்களை கலந்து ஆலோசிக்காமல் சில வேலைகளை செய்யலாம் என்று இருக்கிறது. இது மிகவும் பொருத்தமாக இருக்கிறது என்பதே என் அபிப்பிராயம். அதாவது பஞ்சாயத்தில் சில இடங்களில் திடீரென்று மழை பெய்து சில சேதங்கள் ஏற்படும், மரங்கள் காற்றில் ரோட்டின் குறுக்கே விழுந்து விடும். இந்த சந்தர்ப்பங்களில் பஞ்சாயத்து தலைவருடைய அனுமதியை பெறுவதற்கும், கூட்டத்தைக் கூட்டுவதற்கும், அப்ரூவல் வாங்குவதற்கும் வேலை செய்துகொண்டிருந்தால் அதில் எவ்வளவோ சிரமங்கள் இருக்கும். சிறிய காரியங்களுக்கு எல்லாம் எக்ஸிக்யூட்டீவ் ஆபீஸர்களுக்கு அதிகாரம் கொடுக்காமல் இருந்தால் பல வேலைகள் நடப்பதற்கு தாமதம் ஏற்படும். அதனுல்தான் இது போடப்பட்டிருக்கிறதே தவிர பெரிய காரியங்களுக்கு இவ்விதம் திடீரென்று செலவு செய்வதில்லை. அவசர காலங்களுக்கு இம்மாதிரி ஒரு விதி இருக்கவேண்டியதுதான். வேண்டுமானுல் இம்மாதிரியான, அவசர காலங்களில் வேலை செய்யப்படும் பொழுது அந்தந்த பஞ்சாயத் தலைவர்களுக்கு கடிதத்தின் மூலமாக அந்த விபரத்தை தெரியப்படுத்த வேண்டும் என்று ஒரு விதியை, இதற்கான விதிகளை அமைக்கப்படும் பொழுது செய்துகொள்ளலாம். ஆகவே இந்த அதிகாரம் எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்கள், கமிஷனர்கள் இவர்களுக்கு கொடுக்கக்கூடாது என்று சொல்வது சரியல்ல என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. S. SELVARAJAN: ஸார், இது போல் ஒரு அதிகாரி அவசர காலங்களிலும் அவசியமான நேரங்களிலும் காரியங்களை நடத்துவதற்கு சட்ட பூர்வமாக அனுமதிக்கப்படுகிறது என்றுலும்கூட குறைந்த பட்சம் தலைவருக்காவது உடனடியாக தெரிக்கவேண்டும் என்று கனம் அங்கத்தினர் மாதா கவுடர் அவர்கள் சொன்னுர்கள். அவர் விரும்புகிறபடி "In consultation with the president or the chairman" என்று சொல்கிறபோது. இதைப்பற்றி பரிசீலனை அல்லது ஆலோசனை செய்யலாம் என்ற அளவில்தான் இருக்கிறது. இதில் அவருடைய ஆலோசனையை ஏற்றும்கொள்ள வேண்டும் என்ற நிர்பந்தம் இல்லை. இதில் "In concurrence with the president or the chairman" என்று இருக்கவேண்டும். அவசரமான சந்தர்ப்பங்கள் எப்போதும் வருவதில்லை. ஆகவே இதை வரையறுக்கும்படியான முறையில் அடுத்தக் கூட்டத்தில் இதை தெரிவிப்பதற்கு முன்னுல் தலைவரிடத்தில் தெரிவிக்க வேண்டும் என்ற முறையிலாவது விதி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் செல்வராஜ் அவர்கள் சொன்னது போல் எப்போதாவது ஒரு தடவை ஏற்படுகிற அவசர சந்தர்ப்பங்களில் என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதற்குத்தான் இதில் சொல்லப்பட்டிருக்கிறது. இதிலே இருக்கக்கூடிய வாசகம் அதிகப்படியாகத்தான் இருக்கிறது. ஆகவே இதில் "சர்வீஸ்" என்றிருப்பதை எடுத்துவிட்டு அந்த இடத்தில் "ஹெல்த்" என்று போட வேண்டும் என்று நான் ஒரு திருத்தத்தை கொண்டு வருகிறேன்.

I move—

"That in clause 45, *for* the word 'service' occurring in line 32 *substitute* the word 'health.'"

[Sri C. Subramaniam] [27th September 1958

உதாரணமாக காலரா ஏற்படுகிறது. அந்த சந்தர்ப்பங்களில் உடனடியாக பல வேலைகளை செய்யவேண்டும். இதற்கான நடவடிக்கைகளை எடுப்பதற்கு அந்த நிர்வாக அதிகாரிக்கு அதிகாரம் இருக்க வேண்டும். இதன் கீழ் பல வேலைகளையும் அவர் செய்ய வேண்டியிருக்கலாம். அதற்கெல்லாம் சாசுவதமான சட்டங்கள் இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. ஆகவே இதில் "ஹெல்த்" என்று போட்டுக்கொள்ளலாம் என்பது என் அபிப்பிராயம்.

10-50 a.m. அதற்கு அடுத்தபடியாக, இந்த மாதிரியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்போது ஒன்று தலைவருடைய சம்மதத்தைப் பெறவேண்டும், அல்லது அவருக்கு இதைப்பற்றித் தகவல் கொடுக்க வேண்டுமென்று போடவேண்டும் என்று சொன்னார்கள். தகவல் கொடுப்பதில் பிரயோசனம் இல்லை. புரொவைஸோ (b) பிரகாரம், நடவடிக்கையைக் குறித்தும், அதற்கான காரணங்களைக் குறித்தும் அவர் கவுன்ஸிலுக்கு அதன் அடுத்த கூட்டத்திலே ரிப்போர்ட் செய்யவேண்டும் என்று இருக்கிறது. தலைவர் அங்கேயே இருக்கவேண்டுமென்ற விதி கிடையாது. அவருடைய சம்மதத்தைப் பெற்றுத்தான் செய்யவேண்டுமென்று சொன்னால், அவசரமாக உத்திரவு போட்டு நடவடிக்கை எடுக்க முடியாது. இது அவசர கால அதிகாரம் என்பதை மனதில் கொண்டு, பல்வேறு கட்டுப் பாடுகளை ஏற்படுத்துவதின் மூலமாக, அவசரமான நடவடிக்கை எடுப்பதற்கு தடங்கல் ஏற்படும் என்பதை கவனிக்க வேண்டும்.

முக்கியமாக, கனம் அங்கத்தினர் ஷண்முகம் போன்றவர்கள், அவசரம் என்று சொல்லி, அவசரமல்லாத காரியங்களுக்கு பணத்தைச் செலவழித்து விட்டால் என்ன செய்வது, கவுன்ஸில் அவர் மீது நடவடிக்கை எடுக்க முடியுமா, பின்னாலாவது நடவடிக்கை எடுப்பதற்கு இதிலே வழி இருக் கிறதா என்ற சந்தேகத்தைத் தெரிவித்தார்கள். இப்போது நாம் பல பேர்களுக்கு அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறோம். சட்டப்படி அவரவர் அவரவருடைய அதிகாரங்களை நிர்வகிக்க வேண்டுமென்பது நமது நோக்கம். ஆனால், சட்ட வரம்பை மீறி, விதிகளுக்கு விரோதமாக ஏதாவது செய்தால், அவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு அதிகாரம் இருக்கிறது. "இந்தப் பிரிவின்படி நடத்தப்பட்ட காரியத்தைக் குறித்தும், அதற் குண்டான காரணங்களைக் குறித்தும் அவர் பஞ்சாயத்துக்கு அதன் அடுத்த சபையிலே அறிவிக்கவேண்டும்" என்று சொல்லும்போது, ரிப்போர்ட்டை கவனித்து, நடவடிக்கை எடுக்கவேண்டிய அவசியம் இருந்தால் நடவடிக்கை எடுப்பதற்கு அதிகாரம் இருக்கிறது. கவுன்ஸிலுக்கு ரிப்போர்ட் செய்ய வேண்டியது அவசியம் என்று இருக்கும்போது, ரிப்போர்ட் வந்தவுடன், அந்த ரிப்போர்ட்டைப் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுப்பதற்கு கவுன் ஸிலுக்கு அதிகாரம் இருக்கிறது. அதேமாதிரியாக ஒரு கமிஷனர் சரியான முறையில் அதிகாரத்தை நிறைவேற்றவில்லை, அவசியமில்லாத ஒரு செலவைச் செய்திருக்கிறார், அவர் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கவுன்ஸில் கருதினால்—கமிஷனர் சர்க்கார் நியமித்த அதிகாரி யானதால்—சர்க்கார் அவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சர்க்காருக்குத் தெரிவித்தால் சட்டத்தை துஷ்பிரயோகம் செய்திருக்கிறார் என்று சர்க்கார் கருதினால், சர்க்காரும் அவர் மீது நடவடிக்கை எடுக்கக் கடமை பட்டிருக்கிறார்கள். இதற்கு சட்டம் வேண்டியதில்லை. நிர்வாக அமைப்பிலே ஏற்பட்டிருக்கிற ஒரு இயற்கை விதி. ஒவ்வொரு இடத்திலும் அதிகாரம் கொடுக்கும்போது, சட்டத்திற்குப் புறம்பாக ஏதாவது செய்தால் நடவடிக்கை எடுக்கவேண்டும், கவுன்ஸில் நடவடிக்கை எடுக்கவேண்டும், அல்லது சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று ஒவ்வொரு இடத் திலும் போடவேண்டியதில்லை.

இதைக் கவனித்து, நடவடிக்கை எடுத்துக்கொள்வதிலே இன்னும் விரிவாக சில விஷயங்களைக் குறிப்பிடவேண்டுமென்றிருந்தால், விதிகளை வகுக்கும்போது செய்துகொள்ளலாம்.

SRI A. GOVINDASAMY : இதிலே [illegible] அப்ஜெக்ஷன் வந்தால் அது எக்ஸிக்யூடிவ் ஆபீஸரைச் சாருமா? [illegible] கட்டுப்படுத்துமா ?

27th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : எக்ஸிக்யூடிவ் ஆபீஸரைத்தான் சாரும். "the immediate execution of which is, in his opinion necessary" என்றிருக்கிறது. ஆகையால் ஆடிட் அப்ஜெக்ஷன் வந்தால் அது அவரைத் தான் சாரும்.

The amendment of Sri M. Jagannathan was put and lost.

The amendments of Sri N. K. Palanisami and Sri K. Sattanatha Karayalar were, by leave, withdrawn.

The Government amendment was put and carried.

Clause 45 as amended was put and carried.

*Clause* 46.

DEPUTY SPEAKER : The motion is—

"That Clause 46 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In line 2, page 325, *after* the words 'by the' *insert* the words 'members present at the'.

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment, Sir.

SRI N. K. PALANISAMI : இதிலே ஏதாவது ஒரு மெம்பர் அந்த பஞ்சாயத்தைச் சேர்ந்தவராகவோ அல்லது பஞ்சாயத்துக்குச் சம்பந்தப்பட்டவராகவோ இருந்தால் அவர் அந்த விஷயங்களில் தலையிடுவதாகத் தெரிந்தாலும், பார்ட்னராக இருந்தாலும், அவர் கலந்துகொள்ளக்கூடாது என்று பஞ்சாயத்தோ, அல்லது பஞ்சாயத்து யூனியனோ உத்திரவிடலாம் என்று இருக்கிறது. அப்படி இருக்கும்போது . . . .

SRI T. SAMPATH : Sir, the hon. Member is again making a mistake.

SRI N. K. PALANISAMI : Sir, how can a meeting choose the member? I want to make it clear by my amendment. If my amendment is accepted, it will read, 'by a member chosen by the members present at the meeting' instead of 'by a member chosen by the meeting'.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, the meaning is the same whether the wording is 'by a member chosen by the meeting' or 'by a member chosen by the members present at the meeting'. The hon. Member wants to add the words 'members present at the'. I have no objection to accept it.

The amendment was put and carried.

Clause 46, as amended, was put and carried.

*Clause* 47.

DEPUTY SPEAKER : The motion is—

"That clause 47 do stand part of the Bill."

SRI A. GOVINDASAMY : Sir, I move—

"In the proviso to sub-clause (1), *for* the words 'sixty days' *substitute* the words 'thirty days'."

[illegible] கவுன்ஸில்கள் 60 நாட்களுக்குள்ளாக இரண்டு [illegible] போதும் என்று இருக்கிறது. 60 நாளுக்கு பதிலாக [illegible] வேண்டும் என்பது எனது அபிப்பிராயம். இப்போது

ஜில்லா போர்டு கூட்டங்கள் ஒரு மாதத்திற்குள்ளாக நடந்து கொண்டிருக்கின்றன. அதே முறையில் பஞ்சாயத்து கவுன்ஸிலும் மாதத்திற்கு ஒரு முறை நடக்கவேண்டுமென்றிருந்தால் பல கோரிக்கைகளைக் கொண்டு போகவும், நிறைவேற்றிய தீர்மானங்கள் சரிவர நடைமுறைக்கு வந்திருக்கிறதா என்று கவனிக்கவும் சௌகரியமாக இருக்கும். ஆகையால் எனது திருத்தத்தை ஏற்றுக்கொள்வதில் சர்க்காருக்கு ஒன்றும் சங்கடம் இருக்காது என்று கருதுகிறேன். அதை ஒத்துக்கொள்வார்கள் என்றும் நம்புகிறேன்.

SRI P. U. SHANMUGAM : I second the amendment, Sir.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே எத்தனை கூட்டங்கள், எந்தெந்த சமயங்களில் கூட்டவேண்டுமென்று இந்த விதியிலே ஒன்றும் இடையாது. எவ்வளவு கூட்டங்கள் அவசியமோ, அவ்வளவு கூட்டங்களை கூட்ட அதிகாரம் இருக்கிறது. இந்த சபை 6 மாதத்திற்குள்ளாக கூடவேண்டுமென்றிருக்கிறது. அதாவது ஒரு கூட்டம் முடிந்ததற்கும், மறு கூட்டம் கூட்டப்படுவதற்கும் இடையில் 6 மாதங்களுக்கு மேல் இருக்கக்கூடாது என்பதுதான் அதனுடைய அர்த்தம். அதே போல பஞ்சாயத்து கவுன்ஸில் கூட்டத்தைக் கூட்டுவதிலே, 2 மாதங்களுக்கு மேல் இடைவெளி இருக்கக்கூடாது என்று இருக்கிறது. 2 மாதங்களுக்குப் பிறகுதான் கூட்டவேண்டுமென்றில்லை. அலுவல்களுக்குத் தகுந்தாற்போல வாரத்திற்கு ஒரு முறையோ, 15 நாட்களுக்கு ஒரு முறையோ, அல்லது மாதத்திற்கு ஒரு முறையோ கூட்டலாம், ஆனால் 2 மாதத்திற்குள்ளாக கூட்டப்படவேண்டும். அந்தந்த கவுன்ஸில் அலுவல்களுக்குத் தகுந்தமாதிரி கூட்டங்களை நடத்திக்கொள்ளலாம். பட்ஜெட்டை கவனிக்கும்போது கவுன்ஸிலை அடிக்கடி கூட்டவேண்டியிருக்கலாம். பட்ஜெட் முடிந்தவுடனே 2 மாதங்களுக்கு உடனடியாக வேலையிருக்காது ; ஏனென்றால், நிறைவேற்றப்பட்ட பட்ஜெட்டை அனுசரித்து நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கும். அதை விட்டு ஒரு மாதத்திற்குள் கூட்டியாகவேண்டுமென்று போட்டால், வேலை ஒன்றுமில்லாவிட்டாலும் எல்லோரையும் கூட்டிவிட்டு, வேலை ஒன்றும் இல்லை, ஆகையால் கலையலாம் என்று சொல்ல வேண்டிய நிலை வந்து விடும். ஆகவே, 2 மாதம் என்று இருப்பது சரி. முதலிலே 3 மாதம் என்று போட்டிருந்தோம். அதை இப்போது 2 மாதமாக மாற்றியிருக்கிறோம். ஆகையால் இப்போது இருப்பதையே ஒப்புக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

Sir, I move—

In sub-clause (2), line 21, *after* the words ' by the ' *insert* the words ' members present at the '."

This is similar to the amendment moved to clause 46 (1).

The amendment of Sri A. Govindasamy was put and lost.

The Government amendment was put and carried.

Clause 47, as amended, was put and carried.

*Clause* 48.

DEPUTY SPEAKER : The motion is—

" That Clause 48 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" In sub-clause (1), in line 35, *after* the word ' public ' *insert* the words ' it is found from records that '."

SRI N. MARUDACHALAM : I second the amendment

SRI V. K. KOTHANDARAMAN : இந்த 48-வது பிரிவு என்ன சொல்லுகிறது என்றால் எந்தெந்த காலத்திலே ஒரு அங்கத்தினர் கூட்டத்திலே கலந்துகொள்ளக்கூடாது அல்லது வோட் செய்யக்கூடாது

27th September 1958] [Sri V. K. Kothandaraman]

என்பதுதான். ஒன்றுவது உட்பிரிவின்படி அங்கத்தினருக்கு ஆகிலும், அவருடன் தொடர்புள்ள பங்குதாரர்க்கு ஆகிலும், நேரடியாகவோ, மறைமுகமாகவோ எதாவது பாத்யதை இருந்தால், அப்பேற்பட்டவர் எதாவது பாத்யதை இருக்கிற பட்சத்தில், அந்த மாதிரி திரவிய சம்பந்தப் பட்ட விஷயம் விவாதத்திலே இருக்கும்போது, விவாதத்திலே பங்கு கொள்ளக்கூடாது, வோட் அளிக்கக்கூடாது இதுமாதிரி முனிசிபல் சட்டத்திலேயும் இருக்கிறது. ஒரு பகுதியிலே இந்த மாதிரி பாத்தியதை இருக்குமானால் கலந்துகொள்ளக்கூடாது என்று சொல்லிவிட்டு, அடுத்து வரும் பிரிவிலே, அதைத் தலைவர் ஏற்றுக்கொள்ளவில்லை என்று சொன்னால் அதைக் கமிட்டியிலே வைத்து, அங்கே வோட்டுக்கு விட்டு, மெஜாரிட்டி கலந்துகொள்ளலாம் என்று முடிவு செய்வார்களேயானால், விவாதத்திலே பங்கு எடுத்துக்கொள்ளலாம், வோட்டு அளிக்கலாம் என்றிருக்கிறது. ஒரு பகுதியிலே அவர் கலந்து கொள்ளக்கூடாது என்றும், மறு பகுதியிலே, அங்கே இருக்கக்கூடிய கவுன்சில் முடிவு செய்தால் கலந்துகொள்ளலாம் என்றும் இரண்டுவிதமாக, முன்னுக்குப் பின்னே முரண்பாடாக இருக்கிறது. அது மட்டுமல்ல. ஒரு கவுன்சில் கூட்டத்திலே ஒரு முறை ஒரு அங்கத்தினர் கலந்துகொள்ளக்கூடாது என்று சொன்னதை தலைவர் ஏற்றுக்கொண்டு, விவாதத்திலே கலந்துகொள்ளக்கூடாது, வோட் அளிக்கக்கூடாது என்று முடிவு செய்தபிறகு, அடுத்த கூட்டத்திலே, அதே தீர்மானத்தைப் பிரயோகிக்கக்கூடிய நேரத்திலே, அதே தலைவர், அதை கவுன்சிலுக்கு விட்டுவிடுகிறேன், உங்கள் அபிப்பிராயப்படி முடிவு செய்யுங்கள் என்று சொல்லக்கூடிய அளவுக்கு, முதல் கூட்டத்திலே வெளியேற்றப்பட்ட அதே நபர் அடுத்த கூட்டத்திலே அனுமதிக்கப்படுகிற நிலைமை ஏற்படுகிற காரணத்தினால், இதை மாற்றியமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். வீட்டு வரி, தொழில் வரி, நில வரி, இது போன்று திரவிய சம்பந்தப்பட்ட விஷயங்களிலே அந்தக் குறிப்பிட்ட அங்கத்தினருடைய பிரச்னை விவாதத்திற்கு வரும்போதுதான் அவர் கலந்து கொள்ளக்கூடாது. அப்படியிருக்கும்பொழுது, அதை மீண்டும் கவுன்சிலில் வைத்து முடிவு செய்வது என்பது, ஒரு பகுதியிலே அதிகாரத்தைக் கொடுப்பதுபோல கொடுத்துவிட்டு, மறு பகுதியிலே அதை எடுத்து விடுவது போல் இருக்கிற காரணத்தினாலே, திரவிய சம்பந்தப்பட்ட விஷயம் விவாதத்திற்கு வரும்பொழுது, அதிலே பாத்யதை இருந்தால், விவாதத்திலே பங்கு எடுத்துக்கொள்ளக்கூடாது, வோட் அளிக்கக் கூடாது என்று இருந்தால் போதும். ஆகவே, அடுத்த பிரிவை நீக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இதிலே இருக்கக்கூடிய முக்கியமான விதி என்னவென்றால், அங்கத்தினருக்கு அங்கு விவாதத்தில் இருக்கக்கூடிய விஷயத்திலே எதாவது சம்பந்தம் இருக்குமேயானால், அந்த சம்பந்தத்தின் காரணமாக விவாதத்திலே பங்கு எடுத்துக்கொள்ளக்கூடாது என்பது. ஆனால் அவ்வாறு சம்பந்தம் இருக்கிறதா, இல்லையா என்பதை எப்படி தீர்மானம் செய்வது என்பதைக் கவனிக்கவேண்டும். கனம் பழனிசாமி "it is found from records that" என்று இருக்கவேண்டும் என்று சொல்லுகிறார். ஒரு சமயம் ரிக்கார்டுகள் இல்லாமல் இருக்கலாம். கனம் பழனிசாமி சொல்லுவதை ஒப்புக்கொண்டால், அங்கத்தினரே சம்பந்தம் இருக்கிறது என்று ஒப்புக்கொண்டாலும் கூட, ரிக்கார்டுகள் இல்லை என்பதற்காக அதைத் தள்ளி வைக்கக்கூடாது. ஆகவே, சம்பந்தம் இருக்கிறதா, இல்லையா என்பதைப்பற்றி அங்கு இருக்கக்கூடியவர்கள் பல்வேறு சாட்சியங்களை வைத்து முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. "ரிக்கார்டுகளிலிருந்து" என்ற வாசகத்தைப் போட்டோமானால், ரிக்கார்டுகள் இல்லாத காலங்களிலே, இந்த விதியின் கீழ் நடவடிக்கை எடுக்க முடியாது. அப்பொழுது இதை யார் முடிவு செய்வது? தலைவருக்கே அந்த அதிகாரத்தைக் கொடுத்துவிடலாமென்று ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் சொல்லுகிறார். சரி, தலைவருக்கே கொடுத்து விடுகிறோம். போதுமான ஆதாரம் இல்லாமலேயே ஒரு அங்கத்தினருக்கு இந்த விஷயத்திலே சம்பந்தமிருக்கிறது, ஆகவே இதில் அவர் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடாது என்று தலைவர் முடிவு செய்தால், கோதண்டராமன் அவர்கள் சொல்லக்கூடிய வாதத்தை ஒப்புக்கொண்டால் அதுவே

கடைசி முடிவாகிவிடும். அதே சமயத்தில் அந்த அங்கத்தினர் தனக்கு சம்பந்தமில்லை என்று சொன்னால், அதை எப்படி முடிவு செய்வது என்பதுதான் பிரச்னை. தலைவர் "சம்பந்தம் இருக்கிறது" என்று சொல்லுகிறார். ஆனால் அங்கத்தினர் "சம்பந்தம் இல்லை" என்று சொல்லுகிறார். இதை யார் முடிவு செய்கிறது? தனிப்பட்ட நபருக்கே அதிகாரத்தைக் கொடுத்து விடுங்கள் என்று கோதண்டராமன் சொல்லுகிறார். தனிப்பட்ட நபருடைய முடிவை அவர் ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கும்பொழுது, ஏன் கவுன்சிலின் முடிவை ஏற்றுக்கொள்ளக்கூடாது? கவுன்சில் முக்கியமா, அல்லது தலைவர் முக்கியமா என்ற அடிப்படைப் பிரச்னை இதிலே எழுகிறது. அங்கத்தினர் தனக்கு சம்பந்தமில்லை என்று சொல்லும்பொழுது, அங்கே இருக்கக்கூடிய கவுன்சிலர்கள் கூட்டத்திலேதான் முடிவு செய்யவேண்டும். கோர்ட்டுக்குப் போய்விட்டுவந்துதான் விவாதம் செய்ய வேண்டும் என்று சொல்லுவது சரியல்ல. நியாயப் பிரகாரம் அங்கு இருக்கக்கூடிய அங்கத்தினர்கள் முடிவு செய்வார்கள், அவர்கள் எல்லோரும் சேர்ந்து முடிவு செய்யட்டும் என்றுதான் அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. தலைவரின் முடிவுக்கு விட்டால் சில இடங்களிலே சரியாக நடக்கும். சில இடங்களிலே துஷ்பிரயோகத்திற்கு இடம் ஏற்படும். அபிப்பிராயபேதம் இருக்கும்பொழுது கவுன்சில் முடிவு செய்யவேண்டுமென்று இந்தப் பிரிவு கூறுகிறது. இருக்கிறபடியே ஒப்புக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஸ்ரீ பழனிசாமியின் திருத்தம் இதற்குப் பொருந்தாது என்றும் தெரிவித்துக்கொள்கிறேன்.

The amendment was, by leave, withdrawn.

Clause 48 was put and carried.

Clause 49 was put and carried.

(Mr. Speaker in the Chair.)

*New clause 49-A.*

SRI S. M. ANNAMALAI: Sir, I move—

"*Add* the following new clause, namely—

'49-A. If the minutes of dissent have not been allowed by the president or the chairman, the same shall be sent by the member or members to the Inspector within a week of the date of meeting held.'"

SRI A. GOVINDASAMY: I second the amendment.

SRI S. M. ANNAMALAI: பஞ்சாயத்து போர்டு மீட்டிங் நடந்தாலும் பஞ்சாயத்து கவுன்சில் மீட்டிங் நடந்தாலும், "minutes of dissent" அனுப்பவேண்டுமென்றால், 48 மணி நேரத்திற்குள் தலைவருக்குக் கொடுக்கவேண்டுமென்றிருக்கிறது. அப்படிக் கொடுக்கத் தவறினால், அந்த சமயங்களில் பஞ்சாயத்து போர்டு மெம்பரோ அல்லது பஞ்சாயத்து கவுன்சில் மெம்பரோ, ஒரு வாரத்திற்குள் அவருடைய "minutes of dissent" ஐ இன்ஸ்பெக்டருக்கு அனுப்பலாமென்று என்னுடைய திருத்தம் கூறுகிறது. சில பஞ்சாயத்து போர்டுகளில் தலைவர் வாங்கமுடியாது என்று சொல்லுவதினால், தலைவருக்கும், அங்கத்தினர்களுக்கும் சண்டை சச்சரவு ஏற்படுகிறது. அதைத் தவிர்ப்பதற்காகத்தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதை தயவு செய்து ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இது அவநம்பிக்கையின் அடிப்படையிலே எழுந்திருக்கக்கூடிய ஒரு திருத்தம். ஒரு சட்டம் போட்டால் அந்த சட்டப்படி எல்லோரும் நடக்கவேண்டியதுதான். இந்தத் திருத்தம் அவசியமில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

The amendment was put and lost.

Clauses 50 to 52 were put and carried.

27th September 1958]

*Clause* 53.

MR. SPEAKER : The motion is—

" That Clause 53 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

(i) In clause 53, *for* sub-clause (1) *substitute* the following :—

" (1) (*a*) There shall be an Appointments Committee for every Panchayat Union, which shall be composed of the Chairman of the Panchayat Union Council, the Commissioner and one member elected annually by the panchayat union council. The chairman of the panchayat union council shall be the chairman of the committee. Subject to the provisions of section 58, and to such rules as may be made by the Government in this behalf appointments to all posts under the panchayat union council the pay of which is debitable to the funds of the panchayat union council, shall be made with the prior approval of the committee.

(*b*) There shall be an Education Committee and a General Purpose Committee in every panchayat union. The panchayat union council may, and if so required by the Government, shall appoint such other committees as may be necessary for the efficient performance of its duties and functions under this Act. Each of the committees constituted under this sub-section shall consist of such number of members as may be specified by the council and shall include the chairman *ex-officio*. The members of each committee, other than the chairman, shall be elected by the members of the panchayat union council."

(ii) *After* sub-clause (2), *add* the following sub-clause :—

" (3) Subject to such rules as may be made by the Government in this behalf, the panchayat union council shall have power, by regulations made from time to time, to determine the powers and duties of every committee constituted under sub-section (1) ".

SRI A. GOVINDASAMY : சர்க்கார் கொண்டுவந்திருக்கும் திருத்தத்தை நான் ஆதரிக்கும் நோத்தில், ஒரு கருத்தையும் சொல்ல விரும்புகிறேன். a.m. ஒரு அங்கத்தினர் ஒரு கமிட்டியில் தான் அங்கம் வகிக்கலாம் என்று விதி இருக்கவேண்டும். தலைவர் வேண்டுமானால் எத்தனை கமிட்டிகள் நியமிக்கப்படுகிறதோ அத்தனை கமிட்டிகளிலும் அங்கம் வகிக்கலாம். ஆனால், ஒரு அங்கத்தினர் ஒரு கமிட்டியில்தான் இடம் பெற வேண்டும். இல்லாவிட்டால், பஞ்சாயத்தில் யாருக்கு செல்வாக்கு இருக்கிறதோ, அவரே எல்லா கமிட்டிகளிலும் அங்கத்தினராக வரவேண்டிய நிலைமை ஏற்பட்டு, அதன் காரணமாக பல சச்சரவுகள் ஏற்படும். ஆகவே, இந்த சாதாரண திருத்தத்தை அரசாங்கம் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : "எஜுகேஷன் கமிட்டி" போன்ற பல கமிட்டிகளை அமைப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். முனிசிபாலிடிகளிலே இதுபோன்ற 'எஜுகேஷன் கமிட்டியிலோ, அப்பாயிண்டுமெண்டு கமிட்டியிலோ, அல்லது காண்டிராக்ட் கமிட்டியிலோ, கமிஷனர், சேர்மன், ஒரு அங்கத்தினர் ஆகிய மூன்று பேர்கள்தான் அங்கம் வகிப்பார்கள். எப்பொழுதும் நாம் நடைமுறையில் வழக்காமக பார்ப்பது என்னவென்றால், கமிஷனரும் சேர்மனும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு நியமனங்களைச் செய்வார்கள். குறிப்பிட்ட ஒரு

[Sri V. K. Kothandaraman] [27th September 1958

வருக்கு நியாயமாக உத்தியோகம் கொடுக்கவேண்டுமென்று உரிமை இருந்தாலும்கூட, அந்த அங்கத்தினர் எவ்வளவு கரடியாக கத்தினாலும் கூட, ஒன்றும் நடக்காத அளவுக்கு நிலைமை இருக்கிறது. பல முனிசிபாலிடிகளில் இம்மாதிரி நடந்து குழப்பம் ஏற்படக்கூடிய நிலைமை இருக்கிறது. இதன் காரணமாக தயவுசெய்து கனம் அமைச்சர் அவர்கள் இதிலே கொஞ்சம் நன்றாக யோசனை செய்து பார்த்து, சேர்மன், கமிஷனர், மற்ற மூன்று அங்கத்தினர்கள் ஆகிய 5 அங்கத்தினர்கள் கொண்ட ஒரு கமிட்டியை நியமித்தால், ஓரளவுக்காவது நியாயமான முறையிலே, நல்ல முறையிலே முடிவு எடுப்பதற்கு சாதகமாக இருக்கமுடியும். ஆகவே, ஒரு அங்கத்தினர் என்று இருப்பதை 3 அங்கத்தினர்கள் என்று மாற்றி 5 பேர்கள் கொண்ட கமிட்டிகளை நியமிக்கவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம்.

*Sri K. SATTANATHA KARAYALAR: கனம் சபாநாயகர் அவர்களே, கல்வியை கவனிப்பதற்காக ஒரு கமிட்டியும், நியமனங்கள் செய்வதற்காக ஒரு கமிட்டியும் அமைக்கப்படும் என்று சர்க்கார் திருத்தம் கூறுகிறது. இதிலே "அப்பாயிண்டுமெண்டு கமிட்டி" அவசியமா என்று சிந்திக்க வேண்டும். அப்பாயிண்டுமெண்டு கமிட்டி, சம்பந்தப்பட்ட வரையில், ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிலும் சேர்மன், கமிஷனர், ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் ஆகிய மூவர் கொண்ட கமிட்டி அமைக்கப்படும் என்று சர்க்கார் திருத்தத்தில் உள்ளது. இதற்கு பதிலாக, நியமனங்கள் முழுவதையுமே பப்ளிக் சர்வீஸ் கமிஷன் கையில் ஏன் ஒப்படைக்கக் கூடாது என்று நான் கேட்கிறேன். ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும் அவர்களே நியமனங்களைச் செய்வது அவ்வளவு சரியான யோசனையாக தோன்றவில்லை. பொதுவாக பஞ்சாயத்து யூனியன், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் இவைகளுக்கு நியமிக்கப்படக்கூடிய நபர்கள் யாவரும் நேரடியாக பப்ளிக் சர்வீஸ் கமிஷன் முகாந்திரமாக அப்பாயிண்டு செய்வது சாலச் சிறந்தது. இல்லாவிட்டால், தனிப்பட்ட நபர்களின் இச்சைக்கு தகுந்தபடி பல பேர்கள் அப்பாயிண்டு செய்யப்படுவதும், அதனால் கட்சிகள் பூசல்களும் ஏற்படவும் இடம் இருக்கிறது. ஒரு பஞ்சாயத்து யூனியனில் வேலை கிடைப்பதற்கு பல அங்கத்தினர்களை பிடித்துக்கொண்டு சிபார்சு செய்யக் கூடிய படலம் நடக்கிறது. ஆகவே, எல்லா நியமனங்களும் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மூலம் நேரடியாகச் செய்வதுதான் சாலச் சிறந்தது. ஆகையால் சர்க்கார் கொண்டுவந்திருக்கும் திருத்தத்தில், முதல் பகுதியை விட்டுவிட்டு, "பி" பகுதியை மாத்திரம் ஏற்றுக்கொண்டால் நலமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

The Hon. Sri C. SUBRAMANIAM: கோதண்டராமன் அவர்கள் மூன்று பேர்கள் கொண்ட கமிட்டிக்கு பதிலாக 5 பேர்கள் கொண்ட கமிட்டி அமைக்கவேண்டுமென்று சொன்னார்கள். பப்ளிக் சர்வீஸ் கமிஷனில் கூட 3 அங்கத்தினர்கள் தான் இருக்கிறார்கள். 3 பேர்கள் இருந்தாலும் சரி, 5 பேர்கள் இருந்தாலும் சரி, கரடியாக கத்துவது இருந்துதான் தீரும். 3 அங்கத்தினர்களை நியமித்தால் அவர்கள் மூன்று பேர்களும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு நியமனங்கள் செய்யலாம். எத்தனை அங்கத்தினர்கள் இருந்தாலும் கரடியாக கத்துவது ஏற்பட்டுத்தான் தீரும். கரடியை பார்த்து பயப்படவேண்டாம் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக ஸ்ரீ சட்டநாதகரையாளர் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மூலம் நியமனங்கள் செய்யப்படவேண்டுமென்று கருத்தை வெளியிட்டார்கள். அந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்துதான். இருந்தாலும், இதுபோல் இருக்கக்கூடிய ஸ்தல ஸ்தாபனங்களுக்கு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மூலம் நியமனங்கள் செய்வதற்கான ஏற்பாட்டை உடனடியாக செய்வதற்கில்லை. இப்பொழுது இருக்கக்கூடிய பப்ளிக் சர்வீஸ் கமிஷனின் ஒரு பகுதியாகவே அதை அமைப்பதா, அல்லது தனியாக ஒரு கமிஷன் நியமிக்கவேண்டுமா என்பது பற்றியெல்லாம் நன்றாக பரிசீலனை செய்த பிறகுதான், கொள்கை அடிப்படையிலே முடிவு எடுக்கக் கூடிய விஷயம் இது. இப்போதைக்கு, அந்த ஏற்பாடு செய்யப்படும்வரையில்

எந்த முறையில் இருக்கவேண்டுமென்று ஆலோசனை செய்து பார்த்து, இந்த நியமனங்கள் செய்யும் அதிகாரத்தை கமிஷனரிடம் விட்டு விடுவதற்குப் பதிலாக, இம்மாதிரி ஒரு கமிட்டிக்கு இந்த அதிகாரத்தைக் கொடுக்கவேண்டுமென்ற முறையில் இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகவே, இந்தத் திருத்தத்துடன் இந்த விதியை ஒப்புக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment was put and carried.

Clause 53, as amended, was put and carried.

Clauses 54 to 57 were put and carried.

*Clause* 58.

MR. SPEAKER : The motion is—

"That Clause 58 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"In the clause, *for* paragraph 2, *substitute* the following, namely :—

'Such rules shall provide for the constitution of all classes of officers and servants of panchayats and panchayat union councils into the Government service'."

SRI N. MARUDACHALAM : I second the amendment.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"*Renumber* clause 58 as sub-clause (1) of that clause and *add* the following as sub-clause (2) :—

'(2) Subject to the provisions of this Act and any rules which the Government may make in this behalf, the panchayat union council may frame regulations in respect of officers and servants on the staff of the panchayat union council—

(*a*) fixing the amount and nature of security to be furnished;

(*b*) prescribing educational and other qualifications;

(*c*) regulating the grant of leave, leave allowances, acting allowances and travelling allowances;

(*d*) regulating the grant of pensions and gratuities;

(*e*) establishing and maintaining provident funds and making contributions thereto compulsory;

(*f*) regulating conduct; and

(*g*) generally prescribing conditions of service :

Provided—

(i) that the amount of any leave, leave allowances, travelling allowances, pension or gratuity provided for in such regulations shall in no case without the special sanction of the Government exceed what would be admissible in the case of Government servants of similar standing and status;

[Sri C. Subramaniam] [27th September 1958

(ii) that the conditions under which such allowances are granted or any leave, superannuation or retirement is sanctioned shall not without similar sanction be more favourable than those for the time being prescribed for such Government servants.' ''

SRI V. K. KOTHANDARAMAN : தலைவர் அவர்களே, இதிலே, உத்தியோகஸ்தர்களின் சம்பளம், படி, டி.ஏ., ஒழுக்கம் முதலிய இவைகளை அரசாங்கமே கவனிக்கும் என்று சொல்லும் நேரத்தில் அது அவர்களை எப்படிப் பாதிக்குமோ, அது சாதகமாக இருக்குமோ, பாதகமாக இருக்குமோ என்றெல்லாம் சந்தேகங்கள் உண்டாகின்றன. இப்பொழுதே, ஜில்லா போர்டுகளிலே வேலை செய்பவர்கள், பஞ்சாயத்து போர்டில் இருக்கும் க்ரூப் கிளார்க்கு போன்றவர்கள் வேலையிழக்கும் நிலை ஏற்படாமல் இருக்க வேண்டும். ஸேல்ஸ் டாக்ஸ் மூலமாக பல ஆயிரக்கணக்கான பேர்கள் வேலையில்லையென்ற நிலைக்கு வந்தார்கள். இப்பொழுது புதிதாக அமைக்கப்படும் பஞ்சாயத்து அமைப்பில், அவர்களே சர்க்கார் உத்தியோகம் என்றே செய்து விட்டால் நல்லது.

SRI K. SATTANATHA KARAYALAR : தலைவர் அவர்களே, இந்த திருத்தத்தில் இருக்கக்கூடிய ப்ரொவைஸோ அவசியமா என்றுதான் யோசிக்க வேண்டும். ஆகவே அதைப் புனராலோசனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI A. GOVINDASAMY : தலைவர் அவர்களே, இந்தப் பஞ்சாயத்து அமையும் நேரத்தில், ஜில்லா போர்டுகளில் வேலை பார்க்கும் குமாஸ்தாக்கள், கீழ்தர சிப்பந்திகள் இவர்களுக்கு வேலை உத்தரவாதம் கொடுக்க வேண்டும். அவர்களையும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களாகவே ஏற்றுக்கொள்ளக்கூடிய நிலைமையை உண்டாக்க வேண்டும். அவர்கள் வேலையிழந்து நிற்காமல் செய்யவேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : சபாநாயகர் அவர்களே, கனம் கோவிந்தசாமி சொன்ன விஷயம் கவனிக்கப்பட வேண்டியதுதான். யார் யாரை எந்த எந்த அளவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்பதெல்லாம் பற்றி சர்க்கார் பரிசீலனை செய்து முடிவு செய்யும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த திருத்தத்தில் முக்கியமான விஷயம், பஞ்சப்படி முதலியவைகளெல்லாம் உத்தியோகஸ்தர்கள் அளவுக்குத்தான் இருக்க வேண்டும். அதற்குமேல் இருக்கக்கூடாது என்பது. இது அவசியம் என்று கருதுகிறேன். வித்தியாசங்களை உண்டாக்கக்கூடாது. இப்பொழுது இருக்கும் வித்தியாசங்களே மிகக் கஷ்டமாக இருக்கிறது. ஆகவே ஒரு வரம்பு வைத்திருப்பது அவசியம். ஆகவே, திருத்தத்தை அப்படியே ஒப்புக்கொண்டு விதியை அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment of Sri V. K. Kothandaraman was put and lost.

The Government amendment was put and carried.

Clause 58 as amended was put and carried.

Clause 59 was put and carried.

*Clause* 60.

MR. SPEAKER : The motion is—

' That Clause 60 do stand part of the Bill '.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

'' In the proviso to sub-clause (1), *for* the words ' commissioner or the executive authorities ', *substitute* the words ' the chairman of the panchayat union council or the president of the panchayat '.''

The amendment was duly seconded.

27th September 1958]

**SRI S. M. ANNAMALAI** : பஞ்சாயத்து போர்டு சிப்பந்திகளை மாற்றுவதில், எக்ஸிக்யூடிவ் ஆபீசரையோ, கமிஷனரையோ கலந்துகொண்டு செய்ய வேண்டும் என்று இருக்கிறது. ஆனால், பஞ்சாயத்து போர்டு ப்ரெஸிடெண்டையோ, கௌன்சிலையோ கலந்து செய்ய வேண்டும் என்று இல்லை. ஆகவே, அதையும் சேர்க்க வேண்டும் என்பதே என் திருத்தத்தின் நோக்கம்.

**SRI V. K. KOTHANDARAMAN** : தலைவர் அவர்களே, ஊழியர்களை அமைக்கும் விஷயத்தில், அதிகாரம் இருக்கக்கூடிய அப்பாயிண்ட்மெண்ட் கமிட்டி அமைக்க அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். அதே போல் இந்த விஷயத்திலும், அந்தக் கமிட்டியைக் கலந்து செய்ய வேண்டும் என்று திருத்தினால் நலமாக இருக்கும்.

ஒரு யூனியனிலிருந்து மற்றொரு யூனியனுக்கு ஊழியர்களை மாற்றும்பொழுது, யாரை மாற்ற வேண்டுமோ அவரைக் கலந்துகொண்டு அப்படிப்பட்டவரின் விருப்பத்தை தெரிந்து கொண்டு செய்ய வேண்டும் என்றிருந்தால் நல்லது. ஊழியர் எழுதிக்கொடுத்து விரும்பினால், அவர் விருப்பத்திற்கிணங்க, இருக்கவேண்டும் என்ற அளவில் இதைக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI M. S. SELVARAJAN** : சபாநாயகர் அவர்களே, எக்ஸிக்யூடிவ் ஆபீசர் தவிர, மற்ற சிப்பந்திகளை மாற்றும்போது, சம்மந்தப்பட்ட கௌன்சிலை கலக்கவேண்டும் என்று விதியில்லை. அதே நேரத்தில், பஞ்சாயத்து யூனியன் கௌன்சில்களின் கமிஷனரல்லாத மற்ற சிப்பந்திகளை மாற்றும் போது, கௌன்சிலுக்கு அபிப்பிராயம் தெரிவிக்க அதிகாரம் இருக்கிறது. கௌன்சிலைக் கலந்து என்ற வாசகம் இருக்கிறது. அதே உரிமை பஞ்சாயத்துகளுக்கும் வழங்கப்படுவதில் என்ன தவறு இருக்கிறது என்று யோசிக்கவேண்டும்.

கனம் கோதண்டராமன் அவர்கள் ஒரு அச்சத்தைத் தெரிவித்தார்கள். சிப்பந்திகள் தாங்களாகவே மாறுதல் விரும்பும்போது அவர்களின் விருப்பத்தை நிறைவேற்ற எந்த விதமான வழி செய்ய வேண்டும் என்பது விதியில், சட்ட ரீதியாக செய்யப்படவேண்டிய விஷயம். அதற்கெல்லாம் வசதியளிக்கவேதான் இந்த ஏற்பாடு.

ஆகவே என்னுடைய வேண்டுகோள் என்னவென்றால் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்குக் கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய அதிகாரம் பஞ் 11-30
சாயத்துக்களுக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்பதுதான். அங்குள்ள a.m.
நிர்வாகம் அதாரிட்டிக்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரம் பஞ்சாயத்துக்களுக்கும் வழங்கப்பட வேண்டும் என்பதுதான். பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் பிரதிநிதிகளுக்கு வழங்கப்பட்டிருக்கும் கௌரவம் பஞ்சாயத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் அங்கத்தினர்களுக்கும் வழங்கப்பட வேண்டும் என்பதுதான் என்னுடைய வேண்டுகோள்.

**SRI M. SELVARAJ** : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, ஒரு பஞ்சாயத்து யூனியன் சிப்பந்தி இன்னொரு யூனியனுக்கு மாற்றப்பட வேண்டுமானால் யூனியன் அங்கீகாரம் அளிக்க வேண்டுமென்றும் அப்படி அங்கீகாரம் அளித்தால்தான் ஒரு யூனியனிலிருந்து "மீயூச்சல் ட்ரான்ஸ்பர்" மூலம் மாற்றிக்கொள்ளலாம் என்றும் விதி இருக்கிறது. சாதாரணமாக ஒரு உபாத்தியாயரை ஒரு யூனியனிலிருந்து மற்றொரு யூனியனுக்கு மாற்ற வேண்டுமானால் டிஸ்ட்ரிக்ட் எடுகேஷனல் ஆபிஸருடைய சம்மதம் வேண்டும் என்று இருக்கிறது. அவருடைய சிபாரிசின்பேரில் ஒரு உபாத்தியாயரை ஒரு யூனியனிலிருந்து மற்றொரு யூனியனுக்கு மாற்றிக்கொள்ளலாம் என்ற முறையில் விதியை திருத்திக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஒருவருக்கொருவர் மாற்றிக்கொள்ள வேண்டுமென்றாலும் மாற்றிக்கொள்ளலாம் என்று திருத்தி அமைத்துக்கொள்ளவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[27th September 1958

* SRI M. JAGANNATHAN : Mr. Speaker, Sir, in the proviso to sub-clause (1) it is stated :

'That no officer or servant (other than the executive officer) shall be so transferred except after consulting, the commissioner or the executive authorities concerned'.

The expression 'except after consulting the commissioner or the executive authorities concerned' is used here. Personally speaking, I am opposed to this idea. Instead of consulting the Commissioner or the executive authorities concerned for such transfers, in my opinion, I suggest that it would be better if either the chairman of the council or the president of the panchayat, as the case may be, is consulted for such transfers because then only it will be in conformity with the status of the chairman of the council or the president of the panchayat. Otherwise, the status of the chairman of the council or the president of the panchayat will not be much respected. Therefore, I only suggest that intead of consulting the Commissioner or the executive authority concerned the chairman of the council or the president of the panchayat should be consulted. Though I have not given an amendment to that effect, I hope the Government will accept my suggestion.

SRI A. GOVINDASAMY : கனம் தலைவர் அவர்களே, பஞ்சாயத்து யூனியன்களில் எவ்வளவோ ஆரம்பப் பாடசாலைகள் இருக்கின்றன. சாதாரணமாக கணவன் மனைவி உபாத்தியாயர்களாக இருந்தால் அவர்கள் ஒரே யூனியனில் வேலை பார்ப்பதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். அப்படி இரண்டு பேர்களும் ஒரே யூனியனுக்கு வரவேண்டும் என்று சம்மதம் தெரிவித்தால் இரண்டு பேர்களுடைய சம்மதத்தைத் தெரிவித்துக்கொண்டு அதிகாரியின் சம்மதம் பெற்று வரலாம் என்று சந்தர்ப்பம் இருக்கிறது என்று நமது நிதி அமைச்சர் ஏற்கனவே சொல்லியிருக்கிறார். ஏதாவது ஒரு பஞ்சாயத்து யூனியன் அப்படி மாற்றுவதற்கு மறுத்தால் அதே நேரத்தில் அந்த வட்டாரக் கல்வி அதிகாரி அவர்களுடைய அனுமதியின் பேரில் மாற்றுவதற்கு விதி இருக்கவேண்டுமென்ற கருத்தை இந்த நேரத்தில் வலியுறுத்த விரும்புகிறேன். ஜில்லா போர்டு இருந்த காலத்தில் ஆசிரியர்களை ஒரு திசையிலிருந்து மற்றொரு திசைக்கு கிட்டதட்ட 60 அல்லது 70 மைல்களுக்கு அப்பால் மாற்றப்பட்டு வந்தது இப்பொழுது குறுகிய அளவில் பஞ்சாயத்து யூனியன்கள் அமைகின்றன. அவர்கள் கூடுமானவரையில் அந்த ப்ளாக் டெவலப்மெண்ட் வட்டத்திலேயே இருந்தால் அவர்கள் நல்ல முறையில் வேலை செய்வதற்கு வசதியாக இருக்கும். கணவரும் மனைவியும் பிரிந்திருந்தால் எப்பொழுது ஓய்வு கிடைக்கப்போகிறது என்று காத்திருந்து ஒருவொருக்கொருவர் பார்த்துக்கொள்ளவதற்கு சந்தர்ப்பத்தைப் பார்த்துக்கொண்டே இருப்பார்கள். அதனால் அவர்கள் கொடுக்கும் கல்வி பயிற்சி பலனடையாமல் போனாலும் போகும். அதனால் கல்வித்தரமும் பாதிக்கப்படும். அதன் காரணத்தால் அதைப்பற்றி கவனிக்க ஒரு வழி செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய திருத்தம் செய்ய வேண்டும் என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இதில் முதல் பகுதியில்—

'Any officer or servant of a panchayat (including the executive officer) may be transferred to the service of any panchayat union council or any other panchayat by the Inspector'. ஆகையால் இம்மாதிரி பஞ்சாயத்து சர்வெண்டாக இருக்கக்கூடியவர் ஒரு

27th September 1958] [Sri C. Subramaniam]

வரை பஞ்சாயத்து யூனியனுக்கோ அல்லது வேறு ஒரு பஞ்சாயத்துக்கோ மாற்றலாம் என்ற விதி. அதற்கு இன்ஸ்பெக்டருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'Provided that no officer or servant (other than the executive officer) shall be so transferred except after consulting the commissioner or the executive authorities concerned. என்றும் இருக்கிறது. ஆகவே இது பஞ்சாயத்துகளில் இருக்கக்கூடிய சிப்பந்திகளை மாற்றுவதற்கு இருககக்கூடிய விதி :

'In making a transfer under this sub-section the Inspector may issue such general or special directions as may in his opinion be necessary for the purpose of giving due effect to such transfer.'

'இரண்டாவதாக Notwithstanding anything contained in this Act or the Madras District Municipalities Act, 1920 (Madras Act V of 1920) any officer or servant of a panchayat union council (including the commissioner) may be transferred by the Government to the service of any other panchayat union council or any municipality constituted under the Madras District Municipalities Act, 1920 '.

பஞ்சாயத்து யூனியன் சிப்பந்திகளை இன்னொரு யூனியன் கவுன்சிலுக்கோ அல்லது முனிசிபாலிட்டிக்கோ மாற்றக்கூடிய அதிகாரம் இது. இந்த அதிகாரம் கவர்ன்மெண்டுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

'Provided that no officer or servant (other than the commissioner) shall be so transferred except after consulting the panchayat union councils or municipal councils concerned '.

'Any authority making a transfer under this sub-section may issue such general or special directions '.

இந்த விதியைப் பொறுத்த வரையில் கவர்ன்மெண்ட் ஒரு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சிப்பந்தியை இன்னொரு பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கோ அல்லது முனிசிபாலிட்டிக்கோ மாற்ற வேண்டும் என்று சொல்லும்போது பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் முனிசிபல் கவுன்சில் அவைகளைக் கலப்பதற்கு இங்கே இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து—அதிகாரிகள், இன்ஸ்பெக்டர்களை மாற்றும்போது இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களை கலக்க வேண்டியது அவசியம். பஞ்சாயத்தில் இருக்கக்கூடிய சிப்பந்திகள் சாதாரணமாக க்ளார்க்குகள் போன்றவர்கள்தான் இருப்பார்கள். சாதாரணமாக கிழே இருக்கக்கூடிய சிப்பந்திகளை மாற்றுவதற்கு இது இருந்தால் போதும் என்பதற்காக இப்படி விதி அமைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் சிறிய அளவில் வைக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது டவுன் பஞ்சாயத்துக்கு நாம் அப்பாயிண்ட்டிங் கமிட்டிக்கு ரூல்ஸ் ஏற்படுத்த வேண்டும் என்கிற முடிவை ஏற்றுக்கொண்டிருக்கிறோம். அது மாதிரி விஷயங்கள் வரும்போது எக்ஸிக்யூடிவ் ஆபீசர்கள், கமிஷனர்கள் இவர்களுடைய ஆலோசனைகளைக் கேட்டு முடிவு செய்ய வேண்டும். அதன்படி விதிகளை அமைக்கும்போது போட்டுக்கொள்ளலாம். அதனால் இப்பொழுது இருக்கக்கூடிய சட்டத்தை திருத்த வேண்டிய அவசியம் இல்லை என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

The amendment was, by leave, withdrawn.

Clause 60 was put and carried.

*Clause* 61.

MR. SPEAKER : The motion is—

'That Clause 61 do stand part of the Bill.'

The Government have given notice of an amendment which completely alters the original Clause 61. Therefore the amendments given notice of by hon. Members to the original clause cannot now fit in. So, my suggestion is that the Government

should move their amendment and hon. Members can speak on it. I do not know whether I will have to rule out all the other amendments . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : The other amendments need not be ruled out as hon. Members may not accept the Government amendment.

MR. SPEAKER : Let Government move their amendment.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"*For* clause 61, *substitute* the following clause :—

'61. *Power to punish officers and servants.*—Subject to such control as may be prescribed by the Government, the executive officer or the commissioner may censure, fine, withhold increments or promotion from, reduce to a lower rank in the seniority list, or to a lower post or time-scale or to a lower stage in a time-scale, suspend, remove or dismiss any officer or servant in the service of the panchayat or panchayat union council as the case may be for any breach of departmental rules or discipline, or for carelessness, unfitness, neglect of duty or other misconduct.' "

11-40 a.m. MR. SPEAKER : Since the amendments of the hon. Members refer more or less to "executive authority or the commissioner", I allow them to move their respective amendments.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"*For* the words 'the executive authority or the Commissioner' wherever they occur, *substitute* the words 'the chairman or the president' ".

The amendment was duly seconded.

SRI K. RAMACHANDRAN : Sir, I move—

"In the clause :

(i) *for* the words 'the executive authority or the commissioner may' in lines 7 and 8, *substitute* the words 'A committee of the panchayat or the union council constituted in the manner prescribed may' and

(ii) *for* items (*a*), (*b*) and (*c*), *substitute* the following, namely :—

'(*a*) Appoint all officers and servants of the panchayat or the panchayat union council as the case may be and withhold increments, or promotion from, reduce to a lower rank in the seniority list or to a lower post or time-scale, suspend, remove or dismiss any such officer or servant:

(*b*) the executive authority or the commissioner as the case may be may save as otherwise provided in the Act or in the rules made thereunder and subject to such restrictions and control and such rights of appeal as may be prescribed in such rules, grant leave to any such officer or servant and for any good and sufficient reason censure or fine any such officer or servant.' "

The amendment was duly seconded.

27th September 1958]

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

"In the clause :

(i) in lines 3 and 7 *for* the words 'executive authority or the Commissioner', *substitute* the words 'President or Chairman'; and

(ii) *omit* item (*a*)."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

**SRI N. K. PALANISAMI :** சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அதிகாரிகளையும், சிப்பந்திகளையும் நியமிக்கவும் நீக்கவும் ஒரு கமிட்டி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்று கனம் மந்திரி அவர்கள் சொன்னார்கள். சிப்பந்திகள் தவறுதல் செய்தால் அவர்கள் மீது அபராதம் போடுவதற்கும், அவர்களுடைய சம்பள உயர்வையும் உத்தியோக உயர்வையும் குறைப்பதற்கும், அந்தக் கமிட்டி முடிவு பண்ணுவதற்கு அதிகாரம் கொடுத்தால், நான் கொடுத்திருக்கும் திருத்தத்தை வாபஸ் வாங்கிக்கொள்ளுகிறேன்.

*** SRI K. RAMACHANDRAN :** கனம் சபாநாயகர் அவர்களே 53–வது ஷரத்திலேயே ஒரு கமிட்டி நியமிப்பதாக போட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மட்டும்தான் அந்தக் கமிட்டியை ஏற்படுத்தவேண்டுமென்றும் அதில் கண்டிருக்கிறது. ஆகையால், இப்பொழுது இருக்கும் 61–வது செக்‌ஷனிலே **"the executive authority or the commissioner may"** என்னும் வார்த்தைகளுக்குப் பதிலாக **"a committee of the panchayat or the union council prescribed may"** என்ற வார்த்தைகளைப் போட்டுக்கொள்ள வேண்டுமென்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதை ஏற்றுக்கொள்ளலாம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அதிகாரிகளையும், சிப்பந்திகளையும் டிஸ்மிஸ் செய்வது, சென்ஷூர் செய்வது, போன்ற பெரிய பனிஷ்மென்டிலிருந்து சாதாரண பனிஷ்மெண்ட் வரையிலும் எக்சிகியூடிவ் ஆபீசரோ கமிஷனரோ கொடுக்கலாம் என்று அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது இருக்கும் ஷரத்திலே. அதற்குப் பதிலாக, பெரிய பனிஷ்மெண்ட கொடுக்கும் அதிகாரம் கமிட்டிக்குக் கொடுக்கப்படலாம். குறிப்பாக, யார் அவர்களை அப்பாயிண்ட் பண்ணுகிறார்களோ அவர்களே இன்க்ரிமெண்ட் நிறுத்தல், ப்ரமோஷனை குறைத்தல், கீழ் உத்தியோகத்திற்கு இறக்குதல், சீனியாரிடு வரிசையில் கீழே இறக்குதல் போன்ற பெரிய பனிஷ்மெண்ட்களை கொடுக்கக்கூடிய முறையில் அதிகாரம் வழங்கப்பட வேண்டும். இத்தகைய பெரிய பனிஷ்மெண்ட் கொடுக்கக்கூடிய அதிகாரங்களும் அந்தக் கமிட்டிக்குக் கொடுத்துவிட்டு, சாதாரண பனிஷ்மெண்டாகிய சென்ஷூர் செய்வது அபராதம் விதிப்பது போன்ற அதிகாரங்களை எக்சிகியூடிவ் ஆபீசர், கமிஷனர்களுக்கு கொடுக்காலம் என்று மாற்றம் செய்யவேண்டும். அதுதான் என்னுடைய திருத்தத்தின் நோக்கம். இப்படிச் செய்தால், பஞ்சாயத்து அதிகாரிகளும், எக்சிகியூடிவ் அதிகாரிகளும், கமிஷனர்களும், மற்ற சிப்பந்திகளும் வேலை செய்யும் போது ஒருவருக்கொருவர் **good relationship** இருக்கும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். யார் சிப்பந்திகளை அப்பாயிண்ட் செய்கிறார்களோ அவர்களுக்கு இதிலே கொஞ்சம் அதிகாரம் கொடுக்கலாம் என்ற காரணத்தால்தான் இந்தத் திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன். இதை ஏற்றுக்கொள்ளும்படியாக நான் கேட்டுக்கொள்கிறேன்.

**SRI K. SATTANATHA KARAYALAR :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஷரத்துப்படி, பஞ்சாயத்திலே வேலை செய்யக்கூடிய ஊழியர்களை நிர்வகிக்கக்கூடிய பொறுப்பு பஞ்சாயத்திலே இருக்கும் எக்சிகியூடிவ்

[Sri K. Sattanatha Karayalar] [27th September 1958

அதாரிடிக்கு அல்லது யூனியனிலே இருக்கும் எக்சிகியூடிவ் அதாரிடிக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. அதை மாற்றியமைக்கவேண்டும் என்பதுதான் பொதுவாக எங்களெல்லோருடைய திருத்தமும் ஆகும். ஆனால், இப்பொழுது இந்த 61–வது ஷரத்துக்கு வந்திருக்கும் சர்க்கார்த் திருத்தமும் கிட்டத்தட்ட அந்த அதிகாரத்தை அவருக்கேதான் கொடுத்து விட்டிருக்கிறது. இந்த ஷரத்துக்கு சர்க்கார் ஒரு திருத்தத்தாலும் கொண்டு வந்தபோதிலும் அதிகாரம் பூரணமாக எக்சிகியூடிவ் அதாரிடிக்குத்தான் கொடுக்கப்பட்டிருக்கிறதுதேயன்றி வேறல்ல.

எனக்கு முன் பேசிய நண்பர்கள், இந்த அதிகாரத்தை எற்கெனவே ஷரத்து 53–இல் சொல்லியிருக்கும் அதே கமிட்டிக்கு கொடுக்கவேண்டுமென்று கூறினார்கள். அப்படி ஒருவேளை அந்த முறையிலே கமிட்டி நிர்வாகத்திற்குக் கொடுக்க முடியாது என்று சர்க்கார் கருதுமேயானல், அதிகாரம் முழுவதையும் எக்சிகியூடிவ் அதாரிடி கையில் பூரணமாகக் கொடுத்துவிடக்கூடாது. ஒரு ஊழியர் மீது நடவடிக்கை எடுக்கவேண்டியிருந்தால், அதுபற்றிய முடிவான அதிகாரம் எக்சிகியூடிவ் அதாரிடியின் கையிலேயே இருக்கக்கூடாது. " He can only recommend " என்று இருக்கவேண்டும். அவரைவிட ஒரு உயர்ந்த அதிகாரிதான் அதை முடிவு கட்டவேண்டுமேயன்றி, அவரே பார்த்து ஒரு சிப்பந்தியை நீக்கி விடுவதற்கான அதிகாரமோ, சென்ஷூர் செய்யக்கூடிய அதிகாரமோ இருக்கக்கூடாது. குற்றம் செய்த விவரத்தையும், அவர் மீது எடுக்க வேண்டிய நடவடிக்கைபற்றியும், அதற்கான காரணங்களையும் காட்டி மேல் இடத்திற்குச் சிபார்சு செய்யவேண்டும். அப்படிச் சிபார்சு செய்யும் போது பஞ்சாயத்து யூனியனுக்கோ பஞ்சாயத்து கவுன்சிலுக்கோ அதைப் பற்றி அவருடைய அபிப்பிராயத்தையும் கேட்பதற்குள்ள ஒரு வசதியும் இருக்கவேண்டும். அந்த அடிப்படையிலேயன்றி, அப்பீல் செய்வதற்குள்ள வசதியும் வேலை செய்கின்றவர்களுக்கு இருக்குமானல் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கக்கூடியதாக இருக்கும். எக்சிகியூடிவ் அதாரிடி நினைத்தப்படி ஒருவரை நியமிப்பதற்கும் நீக்குவதற்கும் முழு வாய்ப்பையும் சந்தர்ப்பத்தையும் அவர்கள் கையில் கொடுக்கக்கூடாது. அது நிர்வாகத்திற்கு மிக மிக அவசியம் என்று கூற முடியாது. இதர இலாகாக்களிலே நிர்வாகங்கள் அந்த அடிப்படையிலே நடக்கும்போது, அடிப்படையிலே இந்த ஷரத்தையும் திருத்திக்கொள்ளவேண்டுமென்று நான் கோருகிறேன்.

* SRI K. VINAYAKAM : Sir, the amendment brought by the Government envisages cases where the executive officer or the commissioner is empowered to punish his subordinates—dismiss them or reduce them in the time-scale and so on. But it does not provide for any scope for appeal whenever a party feels that he has been unjustly treated by the higher authority like the commissioner or the executive officer. The subordinate so affected must be given an opportunity to appeal to the higher authorities, whether it be the Government straightaway or the appointment committee or whoever it may be. That kind of appeal to ventilate his feelings wherever the aggrieved party feels that he has been unjustly punished, should be provided for in the Government amendment.

* SRI M. JAGANNATHAN : Sir, in the new clause proposed by the Government it is stated : " Subject to such control as may be prescribed by the Government, the executive officer . . . ". This is a clause which gives powers to punish the members of the staff who misbehave or neglect their duties. Sir, while we are discussing the merits of this clause, I would like to place before the House a general idea of the system of maintaining confidential files of the members of the staff working in these offices. Time

and again on the floor of this House, views were expressed for the abolition of the system of maintenance of confidential files. The strong reason that was adduced against this system of maintaining confidential files was that it was being used as a weapon in order to intimidate these subordinate officers working in the Government offices, and more often than not, the remarks are entered in the confidential files even without the knowledge of the subordinates. My submission is that whenever any remark is entered in the confidential file, it should be brought to the notice of the subordinate concerned and his explanation called for so that he may be given an opportunity to rectify the defects and try to behave well thereafter. On the other hand under the present system, they enter some damaging remarks against a particular officer who has misbehaved or neglected his duty, whatever it may be, but do not intimate this fact to the particular person concerned. But they keep it on record and when the time comes for the promotion of the particular officer, it is communicated to him. Then it comes as a bolt from the blue to the particular officer and he is made unfit for promotion. Therefore, I would urge the Government to come forward and consider all the aspects of the problem and see that they abolish altogether this system of maintenance of confidential files which is only a relic of the bureaucratic administration. Or they must come forward to amend the rules governing the system in such a way that whenever any remarks are entered in the confidential file against a particular officer, they are immediately communicated to the particular officer concerned and the officer concerned is given an opportunity to rectify his mistakes. I hope that necessary provision will be made under this clause or in the rules to be framed under this Act.

SRI A. GOVINDASAMY: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, பஞ்சாயத்து யூனியனிலே வேலை செய்கின்ற உத்தியோகஸ்தர்கள் தவறு செய்தால், அவர்களுக்கு அபராதம் போடக்கூடிய அதிகாரம் வேண்டுமானால் எக்சிகியூடிவ் அதிகாரிகளுக்கோ கமிஷனர்களுக்கோ அளிக்கலாமே தவிர, வேலையிலிருந்து நீக்குவதற்கு அல்லது சீனியாரிடி லிஸ்டிலிருந்து கீழே இறக்குவதற்கு இம்மாதிரியான பெரிய அதிகாரத்தைக் கொடுக்கின்றபோது, கீழே வேலை செய்கின்ற குமஸ்தாக்களுக்கு எந்த விதமான பாதுகாப்பும் இல்லாமல் போகின்றது. அப்படி அந்த அதிகாரத்தை முழுக்க முழுக்க வழங்குகின்ற நோத்தில், அதிகாரிகள் ரொம்பவும் இந்தக் குமஸ்தாக்களை மிரட்டுகின்ற நிலைமையும் அவர்களுக்குப் பலவிதமான சங்கடங்களைக் கொடுக்கின்ற நிலைமையும், பயமுறுத்துகின்ற நிலைமையும் ஏற்படும். அவர்களுக்கு ஒரு வாய்ப்பு அளிக்கின்ற அளவுக்காவது—இப்படிப் பெரிய தவறுகள் செய்து வேலையிலிருந்து சஸ்பெண்டு செய்யப்பட்டாலும், நீக்கப்பட்டாலும் அதை மறுத்து மீண்டும் பரிசீலித்து முடிவு செய்கின்ற உரிமை—அப்பீல்செய்து கொள்கிற உரிமை அவர்களுக்கு வழங்க வேண்டும். வேலையிலிருந்து நீக்கவேண்டுமானால் அப்படி நீக்குகின்ற அதிகாரத்தை ஐ.எல்.பி. யிடத்தில் கொடுக்கலாமே தவிர அந்தப் பஞ்சாயத்திலேயே வேலை செய்கிற எக்சிகியூடிவ் ஆபீசரிடத்திலோ, கமிஷனரிடத்திலோ ஒப்படைப்பது சரியாகாது. இது வேலை செய்கின்றவர்களுக்கு இருக்கக்கூடிய பாதுகாப்பை இல்லாமல் செய்து விடுகிறது. அதனால் அவர்கள் சரியாக வேலைசெய்ய முடியாத நிலைமை உண்டாகும் என்கிற காரணத்திற்காக இந்தத் திருத்தத்தை வலியுறுத்த விரும்புகிறேன். மேலும் சர்க்கார் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்திலாவது அந்த வாய்ப்பு இருக்கிறதா என்று பார்த்தால்—இவர்களும் அந்தப் பாதுகாப்பு

அளிக்காத நிலைமையில்தான் ஏற்கனவே கொடுத்த ஷரத்தை அப்படியே போட்டிருக்கின்ற அளவுக்கு இருப்பதனால் என்னுடைய திருத்தத்தை நான் வலியுறுத்துகிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : அரசாங்கம் கொடுத்திருக்கிற இந்தத் திருத்தத்தின்படி பஞ்சாயத்து யூனியன் சிப்பந்திகளில் யார் தவறு செய்தாலும்—தவறு செய்ததாக பஞ்சாயத்து எக்சிகியூடிவ் ஆபீசர் கருதும் பட்சத்தில் தண்டனை அளிக்க உரிமைகொடுக்கப்பட்டிருக்கிறது. ஏற்கனவே 1950-ம் வருஷ பஞ்சாயத்து ஆக்டின்படி இந்த உரிமை அவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறதா என்று கேட்கவிரும்புகிறேன். இதை அமைச்சர் அவர்கள் விளக்கவேண்டும்.

நிர்வாக அதிகாரிகளுக்கு நிர்வாக உறுப்பினர்களிடத்தில் கண்டிரோல் இருக்கவேண்டியது அவசியம்தான். ஆனால் அளவுக்கு மீறிய அதிகாரகமாக பதவியில் இருந்தே சிப்பந்திகளை நீக்குவதற்குரிய அதிகாரத்தை அவர்களுக்குக் கொடுக்கவேண்டியது அவசியம் இல்லையென்பது என் கருத்து. கிராமத்தில் சாதாரண பணி புரிந்து வருகிற மணியக்காரர், கர்ணம் முதலியவர்களை நீக்குவதற்கு ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்கு அதிகாரம் கொடுத்தால் எப்படியிருக்குமோ அப்படி இருக்கிறது இது. அந்த அதிகாரத்தை நாம் தாசில்தாருக்குக்கூடக் கொடுக்கவில்லை. ஆர்.டி.ஓ. அவர்களுக்குத்தான் அந்த அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறோம். பஞ்சாயத்தில் இருக்கக்கூடிய எக்சியூடிவ் ஆபீசருக்கு அங்கே இருக்கக்கூடிய சிப்பந்திகளின் மீது எத்தனையோ விருப்பு வெறுப்புகள் இருக்கலாம். நினைத்தால் அவர்கள் திடீரென்று வெளியே அனுப்பி விடுவது என்பது சரியல்ல. இந்த உத்தரவுக்கு மேல் அப்பீல் செய்யவாவது வழிவகை இருக்கவேண்டும். வேறு வழி இல்லையா என்று அமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டலாம். இருந்தாலும் அவ்வளவு பெரிய அதிகாரத்தை மேலே இருக்கக்கூடிய அதிகாரிகளுக்குக் கொடுத்து விட்டால் அதை அவர்கள் துஷ்பிரயோகம் செய்ய மாட்டார்கள் என்று நம்புவதற்கில்லை. அதுவும் சிறிய உத்தியோகஸ்தர்கள் தங்கள் வீட்டுக்கு வந்து சரியாக வேலை செய்ய வில்லை என்ற ஒரு காரணத்திற்காக எக்சிகியூடிவ் ஆபீசர் அவர்கள் மீது பழிவாங்க முடியும். ஆகையால் அவர்களுக்கு இவ்வளவு பெரிய அதிகாரத்தைக் கொடுப்பதற்குப் பதிலாக—அதிகாரத்தை அவர்கள் துஷ்பிரயோகம் செய்யாதவாறு கட்டுப்படுத்தத்தக்க நடவடிக்கைகளையும் நாம் எடுத்துக் கொண்டாகவேண்டும். இவர்கள் தவறாக நடந்தவர்களின் மீது வேண்டுமானால் ரிப்போர்ட் செய்து மேலதிகாரிகளின் உத்தரவைப் பெற்று தண்டனை நிறைவேற்றலாம் என்பதாக இந்த ஷரத்து திருத்தப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. S. SELVARAJAN : சென்ற 1950–ம் வருஷத்திய பஞ்சாயத்து ஆக்ட் பிரகாரம் நிர்வாக அதிகாரிக்கு எல்லை மீறிய அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. அதன் காரணமாகவோ என்னவோ அவர்களுக்கும் பஞ்சாயத்து தலைவர் அங்கத்தினர்களுக்கும் சரியான ஒத்துழைப்பு ஒன்று இல்லாமல் இருந்திருக்கிறது. ஒரு அளவுக்கு அதிகாரம் அதிகமாக இருந்ததன் காரணமாகவோ—அல்லது தங்களுக்கு பஞ்சாயத்து தலைவர், அங்கத்தினர்கள் இவர்களைக் காட்டிலும் அதிகமான அதிகாரம் இருக்கிறது என்பதை அவர்கள் பிறருக்கு உணர்த்தும் வகையில் நடந்து கொண்டதன் காரணமாகவோ ஒரு சுமூகமான ஒற்றுமை அங்கே நிலவவில்லை. பல இடங்களில் சுமூகமான உறவு இருக்க முடியாத நிலைமையும் ஏற்பட்டது. பஞ்சாயத்து தலைவரோ, உப தலைவரோ தவறாக நடந்துகொள்ளவும் பஞ்சாயத்து சிப்பந்திகளின் மீது கூட அதிகாரம் செலுத்த இயலாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதனால் பஞ்சாயத்து சரியான முறையில் நடக்காது சோர்ந்து போகும் நிலைமையும் ஏற்பட்டிருக்கிறது. இதை நீக்குவது எப்படி என்று பார்க்கிற போது இன்ன இன்ன காரியங்கள் என்று பஞ்சாயத்தினாலே தீர்மானம் நிறைவேற்றப்படவேண்டியிருக்கிறது. இந்தக் காரியங்களைச் செய்கிற சிப்பந்திகளுக்கு மேலதிகாரியாக எக்சிகியூடிவ் ஆபீசர் இருந்தாலும், அந்த ஆபீசர் பஞ்சாயத்து தலைவருடைய மேற்பார்வையில் இயங்கக் கடமைப்பட்டவர்,

நிர்வாகத்திலே ஒரு ஒழுங்கான கட்டுப்பாடு இருப்பதற்கு சிப்பந்தி, அவரைக் கட்டுப்படுத்துகிற எக்சிக்யூடிவ் ஆபீசர், இவரையும் கட்டுப்படுத்துகிற பஞ்சாயத்து தலைவர் பஞ்சாயத்து கவுன்ஸில் என்கிற முறையில் செயல்பட்டால் நல்லது என்கிற அபிப்பிராயம் இருந்தது. அப்படி இருக்க வேண்டியதும்—சோர்வு இல்லாமல் பஞ்சாயத்து நடப்பதற்கு வெகுவாக உதவக் கூடும். இருப்பினும் இந்த மசோதாவிலும் நிர்வாக அதிகாரிக்கு அதிக அதிகாரம் வழங்கப்பட்டிருப்பதாக நினைக்கிறேன். இந்த அதிகமான அதிகாரங்களை அவர்கள் துஷ்பிரயோகம் செய்வது என்று வந்தால் பஞ்சாயத்துகளுடைய அமைதியான செயல் முறை நிச்சயமாகப் பாதிக்கப்படும். அதே சமயத்தில் பஞ்சாயத்து சிப்பந்திகளைக் கட்டுப்படுத்தி நல்ல முறையில் அவர்கள் வேலை செய்யும்படியாகச் செய்வதற்குப் பூர்ணமான அதிகாரம் எக்சிக்யூடிவ் ஆபீசருக்கு இல்லாவிட்டாலும் பஞ்சாயத்து நிர்வாகம் ஒழுங்காக நடைபெறாது என்பதை நாம் உணர்கிறோம். நிர்வாகம் நன்றாகத் திறம்படச் செயல்படவேண்டுமென்றால், சிப்பந்திகளைக் கட்டுப்படுத்தி வேலை வாங்குவதற்கு எக்சிக்யூடிவ் ஆபீசருக்கு அதிகாரம் இருக்கவேண்டியதுதான் அவசியம். ஆனால் இவர்கள் தவறாக நடந்து கொண்டால் இவர்களைத் தட்டிக் கேட்பதற்கும் இவர்கள் சரியான முறையில் பணியாற்றும்படி கட்டுப்படுத்துவதற்கும் மேல் அதிகாரி முறையில் யாராவது இருக்கவேண்டும் என்பதை சர்க்கார் நன்றாக உணர்ந்திருக்கிறது என்றே நம்புகிறேன். ஆனால் இந்த ஷரத்தைப் பொறுத்த வரையில் டிஸ்மிஸ் செய்வதற்கு எக்சிக்யூடிவ் ஆபீசருக்கு அதிகாரம் இருக்கக் கூடாது என்பதாக பலர் பேசியிருக்கிறார்கள். நியமனம் செய்யக்கூடிய அதிகாரிக்கு—தன்னால் நியமனம் செய்யப்பட்ட ஒருவர் தவறாக நடந்து கொள்ளும் காலத்தில் அவர் மீது நடவடிக்கை எடுக்க—தண்டனை விதிக்கவோ, சஸ்பெண்ட் செய்யவோ, வேலை விட்டு நீக்கவோ அதிகாரம் இருப்பது அவசியம், ஆனால் அதை அவர் தன் சுயவிருப்பு வெறுப்புப்படி செய்யும்படி விட்டுவிடுவதா, அல்லது நீதி பூர்வமாக தக்க ஆதாரங்களோடு பஞ்சாயத்து கவுன்ஸிலின் சம்மதத்தோடு செய்வதா என்கிற பிரச்னை. இந்த இடத்தில் வேலையை விட்டு நீக்கும் அதிகாரத்தை அவருக்குச் சர்க்கார் கொடுத்திருப்பதன் காரணம் அவர் சிப்பந்திகளை நியமிக்கும் அதிகாரியாக இருக்கிற ஒரு காரணத்தினால்தான் பேப்பர் மூலமாக நியமன உத்தரவை அவர் கொடுப்பது போல, வேலையைவிட்டு நீக்கும் உத்தரவையும் அவர் பிறப்பிக்கவேண்டும் என்கிற ரீதியில் இருக்கும் என்று நம்புகிறேன். சிப்பந்திகளை நியமனம் செய்வதற்கு—எப்படி அவர் தன்னிஷ்டம்போல் வேண்டியவர்களை நியமித்துக்கொண்டு போகாமல் இருப்பதைத் தடுக்க—நல்ல யோக்கியதை உள்ளவர்களை படிப்பு, இதர தகுதி முதலியவைகளைப் பார்த்து விண்ணப்பங்களைப் பரிசிலனை செய்து—சிப்பந்திகளை நியமனம் செய்வதற்கு பஞ்சாயத்து அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்கப்படும் என்று செய்திருக்கிறோமோ அதுபோல விதிகளின் மூலமாக—சிப்பந்திகளின் மீது நடவடிக்கை எடுக்கும்போது—வேலையை விட்டு நீக்கக்கூடிய உயர்ந்தபட்ச தண்டனையை விதிக்கும்போது—அந்தக் கமிட்டியின் அங்கீகாரத்தின்பேரிலேயே அல்லது முறைப்படி மேலதிகாரிகளின் அனுமதிபெற்று —இவர் உத்தரவு பிறப்பிக்க வேண்டும் என்று சர்க்கார் செய்வதற்கு உத்தேசம் கொண்டிருக்கிறதோ என்று நினைக்கிறேன். இப்படிச் செய்வதே சாலச் சிறந்தது என்பது என் கருத்து. நியமன உத்தரவை பிறப்பிக்கக்கூடிய அதிகாரியே, வேலைவிட்டு நீக்கும் உத்தரவை பிறப்பிக்கும் அதிகாரியாக—தண்டனை அளிக்கும் அதிகாரியாக செய்வதில் ஆட்சேபனை இருக்க முடியாது என்று கருதுகிறேன். அப்படி இருக்கவேண்டுமென்பதுதான் என்னுடைய பணிவான கருத்து என்றும், என் அபிப்பிராயம் என்றும் சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இந்த விதியில் பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் சிப்பந்திகளின் நடவடிக்கையை ஒழுங்காகக் கட்டுப்படுத்தி வைத்துக்கொள்வதற்கு யாருக்கு அதிகாரம் இருக்கவேண்டும் என்பதைப் பற்றி நிர்ணயிக்கவேண்டியதாய் இருக்கிறது. சாதாரணமாக இந்த விதிகளுடைய அடிப்படை என்னவென்றால் யாருக்கு ஒரு

[Sri C. Subramaniam] [27th September 1958

சிப்பந்தியை நீக்க அதிகாரம் இருக்கவேண்டும் என்பது தான். ஸ்ரீ செல்வ ராஜ் குறிப்பிட்டது போல நியமன அதிகாரிக்கு அந்த அதிகாரம் இருந்தால் நிர்வாகம் நல்ல முறையில் செயல்படுவதற்கு வழி இருக்கும் என்பது தான் அபிப்பிராயம். அந்த எக்சிகியூடிவ் ஆபீசர் சர்க்கார் சிப்பந்தி
12 noon. நிர்வாக அதிகாரி சர்க்கார் விதிகளின் பிரகாரம் அவருக்கு சிப்பந்திகளின் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு வழி இருக்கவேண்டும். பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் கீழ் நியமிக்கப்படும் சிப்பந்திகள் பேரில் யார் நடவடிக்கை எடுக்கலாம் என்றும், அவர்கள் பேரில் நடவடிக்கை எடுப்பவர்களுக்கு அதற்கு எவ்வளவு தூரம் அதிகாரம் இருக்க வேண்டும் என்றும் நாம் நிர்ணயிக்க வேண்டும். அந்த சிப்பந்திகளை நியமிக்கும் அதிகாரம் இந்த மசோதாவில் யாருக்குக் கொடுக்கப்படுகிறது ? அது எக்சிகியூடிவ் ஆபீசருக்குத்தான் கொடுக்கப்படுகிறது. சிப்பந்திகள் சம்பந்தமாக நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் அவருக்கு இருக்கலாம் என்றும், ஆனால் அவர் இந்த விஷயத்தில் நியமனக் கமிட்டியின் சிபாரிசுப்படி நடக்க வேண்டும் என்றும் தீர்மானித்திருக்கிறோம். அரசாங்கத்தில் இத்தகைய நடவடிக்கைகள் யாரால் எடுக்கப்படுகின்றன என்று பார்ப்போம். அரசாங்கத்தில், உத்தியோகஸ்தர்களை நியமிக்கும்போது பப்ளிக் ஸெர்வீஸ் கமிஷனின் சிபாரிசுப்படி அரசாங்கத்தார் நடக்க வேண்டியிருந்தாலும், நியமனம் செய்வதற்குரிய அதிகாரம் அரசாங்கத்தாருக்குத்தான் இருக்கிறது. அந்த மாதிரி, ஸ்தல ஸ்தாபனத்தில் எக்சிகியூடிவ் ஆபீசர் அந்த சிப்பந்திகளை நியமிக்க வேண்டுமென்றும், ஆனால் இந்த விஷயத்தில் நியமனக் கமிட்டியின் சிபாரிசுப்படி அவர் நடக்க வேண்டுமென்றும் மசோதாவில் குறிப்பிட்டிருக்கிறோம். நியமனம் சம்பந்தமாக நியமனக் கமிட்டி சிபாரிசு செய்யலாம் ; ஆனால் கடைசியில், நியமன உத்தரவு போடுவதற்கான அதிகாரம் எக்சிகியூடிவ் அதாரிடிக்கோ கமிஷனருக்கோ தான் இருக்க வேண்டும். இதே அபிப்பிராயத்தைத்தான் ஸ்ரீ எம். எஸ். செல்வராஜனும் தெரிவித்தார். இந்த விஷயத்தில் நிர்வாக அதிகாரியோ கமிஷனரோ தம் இஷ்டம் போல் நடந்துகொண்டால் என்ன செய்வது என்று நாம் பயப்பட வேண்டியதில்லை. அவர்கள் தங்கள் இஷ்டம்போல் நடக்கமுடியாது. ஏனென்றால் அவர்களுக்கு இந்த அதிகாரத்தை கொடுக்கும் போது "Subject to such control as may be prescribed by the Government" என்ற வரையறையை அந்த அதிகாரியின் அதிகாரத்திற்கு நிர்ணயிக்கிறோம். இந்த வரையறைக்கு உட்பட்டுத்தான் அவர் அதிகாரம் செலுத்த முடியும். இதன்படி, சர்க்கார் அப்போதைக்கப்போது விதிகளை வகுக்கலாம். சிப்பந்திகளுக்கு சில தண்டனைகளைக் கொடுப்பதற்கு அந்த அதிகாரிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் சில சாதாரண தண்டனைகள், சில கடுமையான தண்டனைகள். சட்டத்தின் கீழ் விதிகள் வகுக்கும்போது, சாதாரண தண்டனைகளை அதிகாரியே கொடுக்கலாம் என்றும், இதர தண்டனைகளைப் பொறுத்த வரையில் அவர் நியமனக் கமிட்டியினிடம் ஆலோசனை கேட்டு அதன் ஆலோசனையின் பிரகாரம் தான் தண்டனை விதிக்க வேண்டும் என்றும் விதிகள் வகுக்கலாம் என்பது சர்க்காரின் உத்தேசம். எனவே தான், "Subject to such control as may be prescribed by the Government" என்று இந்த ஷரத்தில் போட்டிருக்கிறோம். அப்போதும், நிர்வாக அதிகாரியோ கமிஷனரோ போடும் உத்தரவே கடைசி வார்த்தையாக இருக்கும் என்று நாம் நினைக்க வேண்டாம். அந்த உத்தரவும் நியாயக்குறைவான உத்தரவு என்று பாதிக்கப்பட்டவரால் கருதப்பட்டால், அவர் அப்பீல் செய்துகொள்வதற்கு இடம் இருக்க வேண்டும். அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் இலாகாத் தலைவருக்கு அப்பீல் செய்துகொள்ளும் முறைதான் இப்போது வழக்கத்தில் இருந்து வருகிறது. அதிகாரிகள் விதிக்கும் கடுமையான தண்டனைகள் சம்பந்தமாகப் போடப்படும் அப்பீல்களை கவனிப்பதற்கு இன்ஸ்பெக்டருக்கு அதிகாரம் கொடுக்க வேண்டும். சாதாரண தண்டனைகளை நிர்வாக அதிகாரிகளே விதிப்பதால் அவைகள் சம்பந்தமான அப்பீல்களை நியமனக் கமிட்டி கவனிக்கலாம் என்று விதி வகுக்கலாம். இதெல்லாம் சர்க்காரின் உத்தேசம். ஆகவே "Subject to such control as may be prescribed by the Government" என்ற நிபந்தனையின்படி சர்க்கார் விதிகள் வகுக்கும்போது,

27th September 1958] [Sri C. Subramaniam]

எப்படிப்பட்ட விதிகளை வகுப்பார்கள் என்று விளக்கியிருக்கிறேன். விதிகளை சிறந்த முறையில் சர்க்கார் வகுப்பார்கள் என்று மீண்டும் சொல்லிக் கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

The amendments of Sri N. K. Palanisami, Sri K. Ramachandran and Sri K. Sattanatha Karayalar were, by leave, withdrawn.

The Government amendment was put and carried.

Clause 62 was put and carried.

*Clause* 63.

MR. SPEAKER : The motion is—

That Clause 63 do stand part of the Bill.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

*After* item (*e*), *insert* the following and *renumber* items (*f*) and (*g*) as (*g*) and (*h*) :—

" (*f*) (i) bringing waste land under cultivation;

(ii) arranging for cultivation of land lying fallow and not cultivated or managed by the owners;

(iii) assisting in the implementation of land reforms measures in the village;

(iv) responsibility for keeping watch over the observance of laws relating to land reforms and reporting to the prescribed authority cases of contravention of these laws;

(v) close association with maintenance of land records;

(vi) disposal of petty revenue disputes about changes of possession and such other disputes;

(vii) establishment of panchayat courts which may exercise civil and criminal judicial function;

*Explanation.*—Civil judicial function will apply to civil suits of the valuation of Rs. 100 to Rs. 500 and criminal judicial function will apply to petty criminal cases such as thefts, etc.

(viii) making recommendation as to equitable rate of interest that may be allowed in respect of loans in civil suits; and

(ix) implementation of the land utilisation order."

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment, Sir.

SRI M. P. SUBRAMANIAM : Sir, I move—

" '*After* item (*g*), *add* the following, namely :—

' (*h*) the registration of birth and deaths '."

SRI A. GOVINDASAMY : I second the amendment, Sir.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, முன்பு இருந்த பஞ்சாயத்து போர்டுகளுக்கு என்னென்ன அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன என்றும் இந்த மசோதாவில் பஞ்சாயத்துக்களுக்கு

என்னென்ன அதிகாரங்கள் கொடுக்கப்படுகின்றன என்றும் பார்க்கும் போது, இந்த மசோதாவில் பஞ்சாயத்துக்களுக்குக் கொடுக்கப்படும் அதிகாரம் மிகக் குறைவு என்று தெரிகிறது. முன்பு இருந்த பஞ்சாயத்து போர்டுகளுக்கு, குளங்களை மராமத்து செய்வது, பள்ளிக்கூடங்களை அதிகரிப்பது, சாக்கடைகளை வெட்டுவது முதலிய காரியங்களைச் செய்வதற்கு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன; மேலும் சிறிய வழக்குகளை விசாரிப்பதற்கும் பஞ்சாயத்து போர்டுகளுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது; வழக்குகளை விசாரிப்பதற்குரிய அதிகாரம்கூட இந்த மசோதாவில் பஞ்சாயத்துகளுக்குக் கொடுக்கப்படவில்லை. ப்ளாக் அபிவிருத்தி வேலைகள் போன்ற கிராம அபிவிருத்தி வேலைகள் பூராவும் இனி பஞ்சாயத்துக்களின் கீழ் வரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துக்களுக்கு போதிய அதிகாரங்கள் கொடுக்காவிட்டால் அந்தத் திட்டங்கள் எவ்வாறு வெற்றிகரமாக நிறைவேறி உணவு உற்பத்தி பெருகும் என்று எனக்குத் தெரியவில்லை. உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டியிருப்பதால் பஞ்சாயத்துக்களைச் சிரமைக்க வேண்டியிருக்கிறதென்ற மசோதாவில் ஆரம்பத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துக்களுக்கு அவசியமான அதிகாரங்களைக் கொடுத்தால் தான், அவை உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பாடுபட முடியும். சர்க்காருக்கு இருக்கும் அதிகாரங்களைப் பூராவும் பஞ்சாயத்துக்களுக்குக் கொடுத்துவிடுவதா என்று கனம் மந்திரி அவர்கள் சிந்திக்கலாம். சர்க்கார் என்னென்ன திட்டங்களை வகுக்கிறார்களோ, அவைகளை நிறைவேற்றுவதற்கு பஞ்சாயத்துகள் மிகவும் உதவிகரமாக இருக்கும். இந்தக் கருத்தை நான் தெரிவிக்கவில்லை. இதைத் திட்டக் கமிஷனே தெரிவித்திருக்கிறது. சில வேலைகளையும் திட்டங்களையும் பஞ்சாயத்துக்களிடம் ஒப்படைக்கலாம் என்று திட்டக் கமிஷன் அபிப்பிராயப்படுகிறது என்று வரி விசாரணைக் கமிஷன் தனது ரிப்போர்டில் குறிப்பிட்டிருக்கிறது. அந்த ரிப்போர்டில் குறிப்பிடப்பட்டுள்ள அந்த வேலைகளையும் திட்டங்களையும் தெரிவிக்கிறேன். இவைகள் தான் அந்த வேலைகளும் திட்டங்களும்.

(1) framing programmes of production for the village; (2) framing budgets of requirements for supplies and finance needed for carrying out the programmes; (3) acting as the channel through which, increasingly, Government's assistance other than assistance which is given through agencies like co-operatives reaches the village; (4) securing minimum standards of cultivation to be observed in the village with a view to increasing production; (5) bringing waste lands under cultivation; (6) arranging for the cultivation of land not cultivated or managed by the owners; (7) organising voluntary labour for community works; (8) making arrangement for co-operative management of land and other resources in the village according to the terms of the prevailing land management legislation; and (9) assisting in the implementation of land reform measures in the village.

சாதாரணமாக சர்க்காரே எல்லா வேலைகளையும் செய்ய முடியாது. கிராமத்தில் இருக்கும் பஞ்சாயத்துக்கள் மூலமாகவும், பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாகவும் இத்தகைய வேலைகளைச் செய்வதற்கு ஏற்பாடு செய்தால் அரசாங்கத்திற்குக் கஷ்டம் இருக்காது. நில சம்பந்தமான திட்டங்களையும் சட்டங்களையும் அமுலுக்குக் கொண்டு வருவதற்கு பஞ்சாயத்து போர்டுகளுக்கு அதிக அதிகாரங்கள் கொடுக்க வேண்டும்.

மேய்ச்சல் நிலங்களைத் தான் (Grazing lands) பஞ்சாயத்து யூனியனின் கையில் ஒப்படைக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திலும் ஏராளமான புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன. புறம்போக்கு நிலங்களைப் பஞ்சாயத்திடம் ஒப்படைக்க வேண்டும்; "நான் பயிர் செய்கிறேன்" என்று வாக்களித்து யாராவது பயிர்செய்ய முன்வந்தால் அவர்களுக்குப் புறம்போக்கு நிலங்களைப் பிரித்துக்கொடுப்ப

27th September 1958] [Sri N. K. Palanisami]

தற்கு பஞ்சாயத்திற்கு அதிகாரம் அளிக்க வேண்டும். மேலும் முன்பெல்லாம், 100 ரூபாய்க்கு உட்பட்ட கடன் வழக்குகளையும் இதர பண வழக்குகளையும் விசாரிக்கும் அதிகாரம் பஞ்சாயத்து போர்டிற்கு—பஞ்சாயத்து கோர்ட்டிற்கு இருந்தது. இந்த மசோதாவில் அந்த அதிகாரம் பஞ்சாயத்து போர்டிற்குக் கொடுக்கப்படவில்லை. அத்தகைய வழக்குகளை முதலில் பஞ்சாயத்து கோர்ட் விசாரிப்பதற்கும் அதற்குப் பிறகு அப்பீலை சப்-மாஜிஸ்டிரேட் கோர்ட் விசாரிப்பதற்கும் அதற்கு மேல் செய்யப்படும் அப்பீலை முன்சீப் கோர்ட் கவனிப்பதற்கும் மசோதாவில் வகை செய்ய வேண்டும். சிறு களவுகள் சம்பந்தப்பட்ட வழக்குகளையும் இதர சிறு வழக்குகளையும் பஞ்சாயத்திலேயே கவனிப்பதற்கு மசோதாவில் வகை செய்ய வேண்டும். அப்படி இல்லாவிட்டால், கிராம ஜனங்கள் நகரத்தில் இருக்கும் கோர்ட்டுகளுக்கு தீர்ப்பைப் பெறுவதற்காக, 6, 7 மாதங்கள் அலைய வேண்டியிருக்கும். இப்படிப்பட்ட சிறிய அதிகாரங்களையாவது பஞ்சாயத்திற்குக் கொடுக்க வேண்டும். கிராமங்களில் ஏராளமான தரிசு நிலங்கள் உழுது பயிரிடப்படாமல் இருக்கின்றன. 1955-ம் வருஷம் "லாண்ட் யூடிலைஸேஷன் ஆக்ட்" இயற்றப்பட்டது. ஆனால் அது சரிவர அமல் நடத்தப்படவில்லை. அதன் காரணமாக உணவு உற்பத்தி அதிகரிப்பு முயற்சி வெற்றிகரமாக இல்லை. பயிர் செய்யப்படாத நிலங்கள் உழுது பயிரிடப்பட்டு உணவு உற்பத்தி அதிகரிக்கப்பட வேண்டுமானால், பஞ்சாயத்துக்களுக்கு அது சம்பந்தமாக அதிக அதிகாரங்கள் கொடுக்க வேண்டும். பஞ்சாயத்துக்களுக்கு அதிக அதிகாரங்களைக் கொடுத்தால் "லாண்ட் யூடிலைஸேஷன்" சட்டம் போன்ற சட்டங்களை சரிவர அமலுக்குக் கொண்டு வருவதற்கும் அவை உதவிகரமாக இருக்கும்; அத்தகைய சட்டங்களை சரிவர அமல் நடத்துவதில் சர்க்காரின் ஏஜெண்டாக அவை இயங்கும். அத்தகைய அதிகாரங்களைப் பஞ்சாயத்துக்களுக்கு அதிக அளவில் கொடுக்காவிட்டால் ராஜ்யத்தில் பழைய நிலைமையே நீடிக்கும், முன்னேற்றம் ஏற்படாது. எனவே என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM: ஐயா, நான் கொடுத்திருக்கும் திருத்தம், 64-வது பிரிவின் கீழ் உள்ளதை 63-வது பிரிவின் கீழ் மாற்ற வேண்டுமென்பது. பிறப்பு, இறப்பு இந்த இரண்டையும் பற்றி பஞ்சாயத்து யூனியன் கௌன்ஸில் புள்ளி விவரங்கள் வைத்திருக்க வேண்டுமென்று விதியிருக்கிறது. அதை பஞ்சாயத்திற்கு கொடுத்து விட வேண்டும். பிறந்ததையும், செத்துப் போனதையும் பற்றி கௌன்ஸிலிற்கு தெரியப்படுத்துவது என்பது நடைமுறையில் முடியாத காரியம். ஆகவே, பஞ்சாயத்திற்கே அந்த அதிகாரத்தை, கடமையைக் கொடுத்து விடவேண்டும். இப்பொழுதுள்ளது போல், கிராம அதிகாரிகள் புள்ளி விவரங்கள் தயார் செய்ய அவசியப்பட்டால், அவர்களுக்கு வேண்டிய நேரத்தில் தகவல் சேகரித்துக் கொள்ளலாம் என்பதுதான் என் திருத்தம். மற்றொன்று, பஞ்சாயத்துக்கு அதிகப்படியான அதிகாரங்கள் கொடுக்க வேண்டுமென்று பல உறுப்பினர்கள் சுட்டிக் காட்டியபோது, அதை, படிப்படியாக செய்ய வேண்டுமென்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். பண்டைக் காலம் முதற்கொண்டு பஞ்சாயத்துகளுக்கு நீதி வழங்கக் கூடிய அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பதை, கொடுக்கக் கூடாது என்று அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள். ஜனநாயக காலத்தில், நீதியையும், நிர்வாகத்தையும் பிரிக்க வேண்டுமென்று சொல்லி, "எக்ஸிக்யூட்டிவையும், ஜுடிஷியரியையும்" பிரித்திருக்கிறார்கள். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் பிரதிநிதிகளுக்கு வழக்குகளை விசாரிக்க அதிகாரம் கொடுக்கக் கூடாதென்று சொல்லலாம். ஆனால் கிராமப்புறங்களில் நடக்கும் வழக்குகளைப் பற்றி நாம் ஒன்று மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். பஞ்சாயத்து சட்டத்தை நாம் சில மாதங்களுக்கு முன்பு திருத்தியபோது, கிராமப்புறங்களில் தேர்தல் காலங்களில் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டதாகவும், ஒற்றுமையாக மக்கள் இருக்க வேண்டுமென்றெல்லாம், ஒற்றுமையைப் பற்றி இங்கு கூறப்பட்டது. பஞ்சாயத்து கோர்ட்டிற்கு வழக்குகளை விசாரிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டதின் நோக்கம், கிராமப்புறங்களில் சண்டை சச்சரவுகள் வந்தால், முன்காலம் தொட்டே கிராமத்தில் உள்ள

12-10 p.m.

[Sri M. P. Subramaniam] [27th September 1958

பெரியவர்கள் சேர்ந்து பஞ்சாயத்து பேசி வழக்குகளை தீர்த்து விடுவார்கள். பஞ்சாயத்தில் இருப்பவர்களுக்குத் தான் அந்த ஊரின் நிலை நன்கு தெரியும், 50 அல்லது 100 ரூபாய் பணம் வாங்கியதாக எழுதிக்கொடுத்திருப்பார்கள், ஆனால் உண்மையிலே அவர்கள் பணம் வாங்கியிருக்க மாட்டார்கள். ஊரில் உள்ளவர்களுக்குத்தான் அது தெரியும். எதற்காக அந்த "பாண்ட் எழுதிக் கொடுக்கப்பட்டது என்பதை அவர்கள் உணர்ந்திருப்பார்கள். ஆனால் அந்த வழக்கு முன்சிப் கோர்ட்டிற்குப் போனால் சட்டத்தில் அடிப்படையில் தான் முடிவு செய்வார்கள். அவர்களுக்கு உண்மை நிலையை தெரிந்து கொள்ளமுடியாது. ஆனால் பஞ்சாயத்துகளுக்கு இவ்வழக்குகளை தீர்ப்பதற்குள்ள அதிகாரம் கொடுக்கப்பட்டால், அவர்கள் எல்லோரும் இரு கட்சியினரையும் அழைத்துப் பேசி ஒத்துப் போகச் சொல்லும் வாய்ப்பு இருக்கிறது. ஆகவேதான் பண்டைக் காலத்தில் நீதி நிர்வாகத்தை அவர்களிடம் ஒப்படைத்திருந்தார்கள், எந்த முற்போக்கான எண்ணத்துடன் அந்த விதியை எடுத்து விட்டார்கள் என்று தெரியவில்லை. இங்கிலாந்தில் கூட "ஹௌஸ் ஆப் லார்ட்ஸ்" ஐத்தான் "அப்பலெட் அத்தாரிட்டி"-யாக வைத்திருக்கிறார்கள். ஆகவே, கிராமப்புறங்களில் உள்ள வழக்குகளை பஞ்சாயத்தே தீர்த்து வைப்பதில் என்ன கஷ்டமிருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை.

SRI G. G. GURUMURTHI : இந்த மசோதாபடி, பஞ்சாயத்து கோர்ட் நடத்தி வந்த வியாஜ்யங்களை பஞ்சாயத்து போர்ட் கவனிக்க முடியாத நிலை ஏற்படுகிறது. ஆகவே, கிராமங்களில் உள்ள சிறு விவசாயிகள், தொழிலாளர்கள் இவர்களிடையே உள்ள லேவாதேவிகளை தீர்க்க பெரும் கஷ்டங்கள் ஏற்படும். அந்த அதிகாரத்தை பஞ்சாயத்து போர்ட்டுக்கு கொடுப்பதில் ஏதாவது ஆட்சேபனையிருந்தால், கிராம பஞ்சாயத்து கோர்ட் அதிகாரங்களை தனிப்பட்ட கமிட்டியிடம், பஞ்சாயத்து மெம்பர்களிடையேயிருந்து தனியாக ஒரு ஸ்டாண்டிங் கமிட்டி நியமித்து அவர்களிடம் இந்த அதிகாரத்தை ஒப்படைக்கலாம். அல்லது, தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளிடம் இந்த அதிகாரத்தை கொடுத்தால் நியாயம் கிடைக்காது என்று நினைத்தால் அரசாங்கமாவது பழைய காலத்தில் இருந்ததைப் போல், ஐந்து பேர்களைக் கொண்ட ஒரு பஞ்சாயத்தையாவது நியமித்து அதனிடம் இந்த அதிகாரத்தை கொடுத்து கிராம மக்களுக்கு சௌகரியம் செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

*SRI K. RAMACHANDRAN : இந்த வகுப்பைப் பொறுத்த வரையில், பொதுவாக பஞ்சாயத்தின் அதிகாரம் என்ற முறையில் இது மிகவும் முக்கியமானதொன்றாகும். பஞ்சாயத்து அதிகாரங்களைப் பொறுத்த வரையில், ஏற்கெனவே இருந்ததை விட இப்பொழுது நாம் என்ன இச்சட்டத்தின் மூலம் அதிகமான அதிகாரங்களை கொடுத்து விட்டோம் என்று சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஏனெனில், இந்தச் சட்டத்தின் நோக்கமே, உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும், கிராமங்களில் நல்ல சுயாட்சி ஏற்பட வேண்டும், அவர்களின் விஷயங்களை அவர்களே கவனித்துக் கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில் தான் இந்த மசோதாவைக் கொண்டு வருகிறோம். அப்படி கொண்டு வரும்போது, அதுவும் இச்சட்டத்தின் முதல் பக்கத்திலேயே, உணவு உற்பத்தியைப் பெருக்க இந்தச் சட்டம் கொண்டு வரப் படுகிறது என்றெல்லாம் சொல்லப் படுகிறது. அதே சமயத்தில், இச்சட்டப்படி இந்த பஞ்சாயத்துகளுக்கு கொடுக்கப் பட்டிருக்கக் கூடிய அதிகாரங்களில் உணவு உற்பத்தியைப் பெருக்கக் கூடிய முறையில் என்ன அதிகாரங்கள் கொடுக்கப் பட்டிருக்கிறது என்று பார்த்தால் ஒன்றுமேயில்லை என்று தான் சொல்ல வேண்டும். கிராமங்களில் 7,000 பஞ்சாயத்துகள் ஏற்படவிருக்கிறது, என்று அறிகிறோம். அப்படி வரும்போது கிராம வாசிகளுக்கு அதில் கவர்ச்சி இருக்க வேண்டுமென்றால், அவர்களது வாழ்க்கையை பாதிக்கக் கூடிய பிரச்னைகளைப் பொறுத்து பஞ்சாயத்துகள் இயங்கக்கூடிய முறையில் அவைகள் இருக்க வேண்டும். விளக்குகள் போடுவது போன்றவைகள் அவைகளின் பிரச்னையல்ல என்று நான் சொல்லவில்லை. இருந்தாலும் அதற்கும் மேலாக அவர்களின் வாழ்க்கையை நேரடியாக பாதிக்கும், பொருளாதார வாழ்க்கையை நேரடியாக பாதிக்கும் சில விஷயங்களைப் பொறுத்த வரையில்

27th September 1958] [Sri K. Ramachandran]

பஞ்சாயத்துகளுக்கு அதிகாரம் இருக்க வேண்டுமென்பதுதான், வெகு நாட்களாக பஞ்சாயத்தின் அதிகாரங்களை கூட்ட வேண்டுமென்று சொல்லி வந்ததின் நோக்கமே தவிர இப்படியே போட்டு விடுவதற்கல்ல என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகவே, "வேஸ்ட் லான்ட்ஸ்"-ஐ விவசாயத்திற்கு கொண்டு வருவது, விவசாயம் சம்பந்தப்பட்ட காரியங்களை பஞ்சாயத்தே நடத்த வேண்டுமென்று சொல்லக் கூடிய திருத்தத்தை ஏற்றுக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். இப்பொழுது ப்ளாக் டெவலப்மென்ட் ஸ்கீமில் வரக்கூடிய நல்ல திட்டங்களையெல்லாம் பஞ்சாயத்து கௌன்ஸில் மூலம் நிறைவேற்ற வேண்டுமென்று வகுப்பு இருக்கிறது. அப்படி வரும்போது பஞ்சாயத்து கௌன்ஸில்கள், பஞ்சாயத்துகளை ஏஜென்ஸிகளாக வைத்துக் கொண்டு இந்தத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டுமென்ற ஒரு முறை இதில் ஏற்படுமானால் இந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்வதால் எந்த விதமான சங்கடமும் இருக்காது. இந்த பஞ்சாயத்துகளை நாம் புதிதாக அமைக்கப் போகிறோம். அப்படி வரும்போது மக்களுக்கு நல்ல, தகுந்த பயிற்சி இல்லாமல் இருக்கலாம். அவர்களுடைய காரியங்களை எல்லாம் பூர்ணமாக செய்து கொள்வதற்கு திறமையோ அல்லது பயிற்சியோ இல்லாமல் இருக்கலாம் என்ற வாதத்தைச் சொல்லலாம். ஆனால் நான் சொல்கிறேன். "புட் புரொடக்ஷன்" சம்பந்தப்பட்ட விஷயங்கள் ப்ளாக் டெவலப்மென்ட் அதிகாரிகளிடம் ஒப்படைக்கவேண்டுமென்று சொல்வதால், பல அதிகாரிகள் இது சம்பந்தமாக ஒத்துழைக்க இருப்பதால், இதை தயக்கம் இல்லாமல் பஞ்சாயத்துகளிடமே ஒப்படைக்கலாம். அது, சட்டத்தில் இல்லாமல் இரப்பது ஒரு பெரிய குறையாகத்தான் இருக்கிறது. ஆகவே, இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு, ஜனங்களை நம்பி காரியங்களை செய்யலாம், அவர்களுக்கு திறமையிருக்கிறது என்பதையும் சொல்லிக் கொள்கிறேன். கோர்ட் விவகாரம் பொறுத்த வரையில் சின்ன கேஸ்களை செலவில்லாமல் நடத்த வசதி செய்யவேண்டும். ஆகவே, 3, 4 பஞ்சாயத்துகளை சேர்த்து, 10 மைல் சுற்றளவிற்குள் இம்மாதிரி பஞ்சாயத்து கமிட்டிகள் அமைத்து சிறிய வழக்குகளை விசாரித்து நியாயம் வழங்க அதிகாரம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI J. MATHA GOWDER: தலைவர் அவர்களே, இதில், பஞ்சாயத்து தலைவர்களுக்கெல்லாம் பஞ்சாயத்து செய்யும் அதிகாரத்தை கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தைப் பார்க்கும்போது, கிராமத்திலுள்ள சிறிய தகராறுகளை பஞ்சாயத்தே எடுத்து நடத்துவது என்பது அவ்வளவு சரியாக இருக்காது. கிராம பஞ்சாயத்திடம், பஞ்சாயத்து கோர்ட் அலுவல்களை, கிரிமனல், சிவில் இரண்டையும் ஒப்படைத்து விட்டால், கிரிமினல் ப்ரொசிஜர் கோடைப் பார்க்கும்போது சொல்லலாம், நம் மக்களுக்கு அவ்வளவு திறமையில்லையா என்று. அதைப் பற்றி நான் இங்கு குறிப்பிட விரும்பவில்லை. ஆனால் கிராமங்களில் இருக்கக் கூடிய கிராம சபைகளை எடுத்துக் கொண்டால், பிளவுகள் கிராமங்களில் ஏற்படும் சூழ்நிலைதான் இருக்கிறது. நாம் இதற்கு முன் பார்த்திருக்கிறோம், 1920-ம் ஆண்டு சட்டத்தின்படி 50 ரூ. வரை டிக்ரி செய்ய அக்கோர்ட்களுக்கு அதிகாரம் இருந்தது. பின்னர் அதை 200 ரூ. என்று மாற்றப்பட்டது. எந்த அளவில் பஞ்சாயத்து கோர்ட்கள் இதுவரை நடந்து வந்திருக்கிறது என்பதை நாம் பார்த்திருக்கிறோம். அதனால் எந்த விதமான பிரயோஜனமும் இல்லை. சண்டைகளை அதிகம் வளர்க்கக் கூடிய அளவிற்கு அவைகள் இருந்ததே தவிர, மக்களுக்கு அது அதிகப்படியாக நன்மை பயக்கக் கூடிய முறையில் அவைகள் இல்லாத காரணத்தினால் சிவில், கிரிமினல் ப்ரொஸீஜர்களை 12 20 p.m. பஞ்சாயத்து கோர்ட்களுக்கு கொடுப்பது அவ்வளவு உசிதமில்லை என்று நான் நினைக்கிறேன். இது கிராமத்தில் இருக்கக்கூடிய மற்ற காரியங்களில் அபிவிருத்தி செய்வதற்கு அதிக அதிகாரங்களை கொடுக்கலாமே தவிர ஸிவில் கிரிமினல் இவைகளுக்கு அதிக அதிகாரம் கொடுப்பது அவ்வளவு உசிதமல்ல. இதனால் பகைதான் அளவுக்கு மீறி வளருமே தவிர கிராமங்கள் அபிவிருத்தி அடையாது என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். இது தவிர புறம்போக்கு நிலங்களை எல்லாம் பஞ்சாயத்துக்கு ஒப்படைத்துவிட வேண்டும். அப்படி செய்தால் தான் கிராமத்திலுள்ள

மக்களுக்கு தேவைப்படும்போது யார் யாருக்கு, எந்த காரணத்திற்காக, என்ன விவசாயம் செய்யப்போகிறார்கள் என்கிற விபரங்களை எல்லாம் அறிந்து கிராமத்திலுள்ள மக்களுக்கு கொடுப்பதற்கு வசதியாக இருக்கும். ஆகவே இந்த புறம்போக்கு நிலங்களை எல்லாம் பஞ்சாயத்தின் கையில் ஒப்படைத்து விட வேண்டும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : சட்டமன்றத் தலைவர் அவர்களே, பஞ்சாயத்துகள் எந்த காரியங்களை, எந்த வேலைகளை யெல்லாம் கவனிக்க வேண்டும் என்று செக்ஷன் 63-எ-ல் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லா பாலங்களையும் கவனிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இதற்கு பஞ்சாயத்தின் நிதி நிலைமை இடம் கொடுக்காமல் இருந்தால் இந்த பாலங்களின் வேலைகளை எல்லாம் ஹைவேஸ் டிப்பார்ட்மென்டே கவனித்துக் கொள்வதற்கு ஏற்பாடு இருக்கவேண்டும். அதோடு பஞ்சாயத் பிரதிநிதிகளுக்கு கோர்ட் அதிகாரம் வழங்கக் கூடாது என்று நமது நிதி அமைச்சர் அவர்கள் கூறினார்கள். இப்போது செக்கண்ட் கிளாஸ் பெஞ்ச் கோர்ட் அங்கத்தினர்கள் எல்லாம் பொது மக்களால் தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். முதல் கிளாஸ் பெஞ்ச் கோர்டுகளின் அங்கத்தினர்கள்தான் நாமினேஷனில் வருகிறார்கள். ஆகவே பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் பஞ்சாயத் பிரதிநிதிகளின் கையில் இந்த கோர்ட் அதிகாரத்தை என் கொடுக்கக்கூடாது என்பது தான் தெரியவில்லை. இப்போது தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் கையில் இந்த அதிகாரம் இருந்து வருகிறதால் நல்ல முறையில் தான் அவர்கள் வேலை செய்து வருகிறார்கள். இவ்விதம் அதிகாரம் கொடுக்காவிட்டால் கிராமத்தி லுள்ள மக்கள் கோர்ட்டை தேடி போக வேண்டியிருக்கும், அல்லது வக்கீல் களின் வீடுகளை தேடி போக வேண்டியிருக்கும், இம்மாதிரியான சங்கடங் கள் ஏற்படக்கூடிய நிலைமை வருவதால் கிராம பஞ்சாயத்துகளுக்கு இந்த அதிகாரத்தை கொடுத்து விடலாம். இந்த அதிகாரம் வழங்குவதின் மூலம், அவர்கள் இந்த அதிகாரத்தை நல்ல முறையில் பயன்படுத்த மாட்டார்கள் என்று பயப்பட வேண்டிய அவசியமில்லை. கோர்ட் அதி காரம் என்று சொல்லும்போது நமது நிதி அமைச்சர் அவர்களுக்கு கோபம் வருகிறது, ஆவேசம் வருகிறது. இந்த அதிகாரத்தை கொடுக் கவே முடியாது என்று கோபத்துடன் சொல்லுகிறார்கள். அவர்களுக்கு வழக்கமாக வருகிற கோபம் என்று வேண்டுமானால் இதை வைத்துக் கொள்ளலாம், ஆனால் இதில் ஏன் அவ்வளவாக ஆத்திரப்படுகிறார்கள் என்று தான் புரிய வில்லை. இதுவரை பஞ்சாயத் உறுப்பினர்கள் கையில் கொடுத்திருந்த அதிகாரங்களின் விளைவாக ஏதாவது தவறுதல்கள் ஏற் பட்டு விட்டதா ? அல்லது அவர்கள் யாராவது அந்த அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்து விட்டார்களா ? அவ்விதமென்றால் அம்மாதிரி எத்தனை இடங்களில் நடந்திருக்கிறது ? அவைகளில் எத்தனை விடங்களில் சர்க்கார் தலையிட்டார்கள் என்கிற புள்ளி விவரத்தை கொடுப்பார்களானால் அமைச்சர் அவர்கள் சொல்லுவதை ஏற்றுக்கொள்வதில் எங்களுக்கு சங்கடம் ஒன்றும் இருக்காது. அடுத்ததாக குழந்தைகள் பிறப்பதையும், இறப்பதையும் பதிவு செய்வது பஞ்சாயத்திலே இருக்கவேண்டும் என்று நண்பர் சுப்பிரமணியம் அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற தீர்மானத்தை நான் ஆதரிக்கின்றேன். இதில் ஷரத்து 65-ல் குழந்தைகள் பிறப்பதை யும் இறப்பதையும் பதிவு செய்வதற்கு பஞ்சாயத் கௌவுன்ஸிலுக்கு கொடுத்திருக்கக்கூடிய அதிகாரத்தை கிராம பஞ்சாயத்துக்குக் கொடுக்கவேண் டும். இதை இப்போது இருக்கும் மணியக்காரர் அல்லது கணக்கப் பிள்ளையே இந்த வேலையை செய்து கொண்டிருக்கலாம். ஆகவே இதை கிராம பஞ்சாயத்தோடு சேர்க்கவேண்டும், அல்லது இப்போது இருக்கிற படியே கிராமத்திலே பதிவு செய்வதற்குள்ள ஏற்பாடு தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

*SRI K. SATTANATHA KARAYALAR : தலைவர் அவர்களே, பஞ்சாயத்துக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தை விரிவு படுத்த வேண்டும் என்று நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். அடிப்படையாக, எனக்கு முன்பு பேசின பல நண்பர்கள் கோர்ட் அதிகாரத்தை பஞ்சாயத்துக்கு விட்டு கொடுக்க வேண்டும் என்று வாதித்தார்கள். இதில் கிரிமினல்

27th September 1958] [Sri K. Sattanatha Karayalar]

வழக்குகளை நடத்துவதற்கு அதிகாரம் கொடுக்க வேண்டாம் என்றாலும் வழியில் வழக்குகளை நடத்துவதற்குள்ள அதிகாரம் கொடுக்கவேண்டும். பஞ்சாயத் என்ற சொல்லே இம்மாதிரிப்பட்ட வழக்குகளை பஞ்சாயத்தார் இருந்து தீர்த்துவைப்பதிலிருந்து தான் வந்திருக்கிறது. நம் தமிழ் நாட்டில் நீண்ட நாட்களாக பஞ்சாயத்து முறையில் வழக்குகளை தீர்த்து வைக்கக்கூடிய முறை இருந்து வந்திருக்கிறது. ஆகவே கிராமத்தில் ஏற்படும் சிறு சிறு வழக்குகளை பஞ்சாயத்தே தீர்த்து வைப்பது என்றிருந்தால் அந்த முறை சாலசிறந்ததாக இருக்கும் என்று நம்புகிறேன். இதில் பெரிய தவறுகள் ஒன்றும் ஏற்பட்டு விடாது என்று நாம் நம்பலாம். இது தவிர ரோடு ரிப்பேர் செய்வதற்கும், சுகாதார சம்பந்தப்பட்ட வேலைகளில் ஈடுபடுவதற்கும் இதில் இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவைகள் எல்லாம் நிதி வரம்புக்கு உட்பட்டுதான் இருக்கும். அதோடு இப்போது கிராமாந்திரங்கள் இருக்கும் விவசாய பெருங்குடி மக்கள் நிலச்சீர்திருத்தச் சட்டம் வருவதைப்பற்றி கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது இருக்கின்ற நிலச்சீர்திருத்த சட்டங்களும் எல்லா ஜில்லாக்களிலும் அமுலில் இல்லை. ஆகவே இந்த சட்டத்தை அமுலில் கொண்டு வரும்போது இது சம்பந்தமான அதிகாரங்கள் பஞ்சாயத்தின் கையில் இருந்தால் இதை அமுலுக்குக்கொண்டு வருவதற்கு வசதியாக இருக்கும். அதாவது ஒரு குறிப்பிட்ட நிலத்தில் யார் பயிர் செய்து கொண்டிருந்தார் என்ற பிரச்னை வரும்போது கோர்டில் எழுத்து மூலமாக குறிப்பிட்ட ஒருவர் தான் பயிர் செய்து கொண்டிருந்தார் என்று சாட்சியம் கொடுக்க முடியாமல் இருந்தாலும் அந்த கிராமத்திலுள்ள மக்களுக்கு யார் பயிர் செய்து கொண்டிருந்தார் என்கிற விபரம் நேரடியாகத் தெரியும். அதன் பிரகாரம் அதில் பயிர் செய்து கொண்டிருந்தவர் யார் என்பதை உண்மையாக வரையறுக்க முடியும். ஆகவே இந்த விதத்தில் நிலப்பிரச்னையை செம்மையாக அமுல் செய்ய முடியும். மேலும் இப்போது நம் நாட்டில் புறம்போக்கு நிலங்கள் 25 லட்சம் ஏக்கர்களுக்கு மேற்பட்டு இருப்பதாக தெரிகிறது. இவைகள் எல்லாம் சாகுபடிக்கு ஏன் கொண்டு வரவில்லை என்பதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. ஆனால் இந்த பூமிகள் எல்லாம் விவசாயத்திற்கு தகுந்த பூமி தான், இவைகளை எல்லாம் விவசாயத்திற்கு கொண்டு வர முடியும் என்று சொல்லுகிறார்கள். புறம்போக்கு நிலங்களை எல்லாம் மேற்பார்வையிடுவதற்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லுவார்கள். ஆனால் அந்த அதிகாரம் எல்லாம் மேலெழுந்தவாரியாகத்தான் இருக்கிறது. ஆகவே இந்த புறம்போக்கு நிலங்களை எல்லாம் பஞ்சாயத்தின் கையில் கொடுக்கவேண்டும். அதில் பஞ்சாயத்து என்னென்ன விதங்களில் விவசாய வேலை செய்திருக்கிறார்கள் என்பதை ஆண்டுதோறும் சர்க்காருக்கு அறிக்கை சமர்ப்பிக்கக் கூடிய முறையில் ஒரு ஏற்பாடு செய்து கொள்ளலாம். அவ்விதம் இருந்தால் தான் பல லட்சம் ஏக்கர்களை உணவு உற்பத்திக்காக உடனடி பயன்படுத்த முடியும் என்பதால் அதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN**: ஸார், பஞ்சாயத்துக்கு இருக்கக்கூடிய கடமைகளில் முக்கியமானது நிலங்களை மேற்பார்வை செய்வது என்பதை நாம் பார்க்க வேண்டும். இந்த சமயத்தில் அதாவது நிலங்களுக்கு உச்ச வரம்பு கட்டப்போகின்ற இந்த நேரத்தில் பஞ்சாயத்துகளுக்கு புறம்போக்கு நிலங்களிலுள்ள எல்லா பொறுப்புகளும் எப்படி விட்டுக்கொடுக்க முடியும் என்ற கேள்வி எழலாம். உச்ச வரம்பு கட்டும்போது அந்ததந்த இடங்களிலுள்ள நிலங்களை மேற்பார்வை செய்வதற்கு வேண்டிய அதிகாரம் பஞ்சாயத்துக்கு இருந்தாக வேண்டும். அதேப் போன்று தான், இன்றைக்கு சர்க்காருக்குச் சொந்தமாக இருக்கக்கூடிய புறம்போக்கு நிலங்களை எடுத்துக்கொண்டால், அதில் இன்றைக்கு கிராமத்தில் இருக்கக்கூடிய கணக்குப்பிள்ளை, மணியக்காரர் இவர்களுடைய ஆதிக்கம் தான் தலைவிரித்தாடுகிறதே தவிர பஞ்சாயத் போர்டுக்கு அதில் ஒரு அதிகாரமும் கிடையாது. புறம்போக்கு நிலங்களில் களத்து புறம்போக்கு, தோட்ட புறம்போக்கு, ரோட்டு புறம்போக்கு, என்றெல்லாம் பலதரப்பட்ட புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன. இந்த புறம்போக்கு நிலங்களை

எல்லாம் மணியக்காரர் நினைத்தால் தனக்கு வேண்டிய ஆட்களுக்கு கொடுக்க முடியும். அதாவது மணியக்காரர் இந்த நிலம் குளம் புறம் போக்கு, இது உபயோகத்திற்கு பயன்படாது, ஆகவே இந்த நிலத்தை விவசாயத்திற்கு கொடுத்து விடலாம் என்று ரிப்போர்ட் எழுதி விட்டால் மேல் அதிகாரிகள் அதில் "சரி" என்று சொல்லிவிடுவார்கள். இம்மாதிரி யாருக்கு கிடைக்கிறது என்று பார்த்தால் வசதியுள்ள பெரிய ஆட்களுக்குத்தான் கிடைக்கிறது. அவர்கள் இந்த மணியக்காரர், கணக்குப் பிள்ளை இவர்களுக்கு ஏதாவது "ஸம்திங்" தள்ளி விட்டால் அவர்களுக்கு வேண்டி சிபார்சு செய்து விடுவார்கள். அதல்லாமல் ஏழையாக இருந்தால், அவரே விவசாயம் செய்து கொண்டிருந்தாலும் அவருக்கு நிலம் கிடைக்காது. இந்த முறையில் தான் இன்றைக்கு கிராமத்தில் புறம்போக்கு நிலங்கள் கொடுப்பது நடை முறையில் சர்வ சாதாரணமாக இருந்து வருகிறது.

12-30 p.m. ஆகவேதான் இதையெல்லாம் திட்டவட்டமாக நல்ல முறையில் பார்த்து அந்த கிராமங்களுக்கு எது அத்தியாவசியமாக இருக்கிறதோ அதை வைத்துக் கொண்டு, மற்றதையெல்லாம், நீண்ட காலங்களுக்கு முன்னால் இதற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது, அதற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றப் பேரால் இருக்கிறதோ அதை மாற்றித் திருத்தி அமைக்கவேண்டும். அந்த அளவுக்கு அமைத்து, தரிசு நிலங்களை மேற்பார்வையிடக் கூடிய அளவுக்கு, நிலம் இல்லாத விவசாயிகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விவசாயத்தை அபிவிருத்தி செய்யக் கூடிய அளவுக்கு அதிகாரம் இருக்க வேண்டும்.

அது மட்டுமல்ல, இன்றைக்கு கிராமங்களில், 1 ஏக்கர், 2 ஏக்கர், 3 ஏக்கர் என்று துண்டு போடக்கூடிய நிலைமை இருக்கிறது. இதைத் தடுக்கக்கூடிய அளவுக்கு பஞ்சாயத்துக்களுக்கு அதிகாரம் இருக்கவேண்டும். இதை எதற்குக் குறிப்பிடுகிறேன் என்று சொன்னால், ஒரு இடத்திலே ஒரு விவசாயிக்கு இரண்டு ஏக்கர் நிலம் இருக்கிறது. அந்த இடத்திற்குப் போக வேண்டுமானால் பல ஏக்கர் நிலங்களைக் கடந்து, மற்றவர்களுடைய நிலத்தின்மேல் போகக்கூடிய நிலைமை இருக்கிறது. அந்த நிலத்திற்குச் சொந்தக்காரர் சொல்லக் கூடியவைகளுக்குத் தலையை ஆட்டிக் கொண்டிருந்தால், நிலச் சொந்தக்காரர் ஒன்றும் சொல்லமாட்டார். இல்லையென்றால், அவருடைய நிலத்தின் வழியே போகக் கூடாது என்று தடுத்து விவசாயம் செய்ய முடியாத நிலைமை ஏற்படுகிறது இன்றைக்கு கிராமங்களில்.

அடுத்தபடியாக இன்றைக்கு கிராமங்களில் குடும்பத் தகராறு காரணமாகவோ, அல்லது வேறு தகராறு காரணமாகவோ விவசாயம் செய்ய முடியாமல் தரிசாகப் போடப்பட்டுள்ள தனிப்பட்ட சொந்த நிலங்களும் இருக்கின்றன. நிலங்களைத் தரிசாகப் போடுவதால் உணவு உற்பத்தி பாதிக்கப்படுகிறது. மக்களை பாதிக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அப்படி இருக்கக்கூடிய நிலங்களைத் தரிசாகப் போட விடாமல், நடவடிக்கை எடுத்து உணவு உற்பத்தி செய்யக்கூடிய அளவிற்கு பஞ்சாயத்து போர்டுக்கு அதிகாரம் இருந்தாக வேண்டும். இது சம்பந்தமாக மத்திய சர்க்கார் வெளியிட்டுள்ள பிளானிங் கமிஷன் ரிப்போர்ட்டில் நிலத்தை துண்டாடப்படுவது தடுக்கப்படவேண்டும், தரிசாக இருக்கக் கூடிய நிலங்களை விவசாயத்திற்குக் கொண்டு வர அதிகாரம் இருக்கவேண்டும், உச்ச வரம்பு கட்டவேண்டும், நிலங்களின் மீது மேற்பார்வை பார்க்கவேண்டும், என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே தான், தரிசு நிலங்களை எந்த பஞ்சாயத்து போர்டின் எல்லைக்குள் இருக்கிறதோ, அந்த பஞ்சாயத்துக்குச் சொந்தமாக்கி, அவர்கள் வினியோகம் செய்யக் கூடிய அளவுக்கு பஞ்சாயத்து போர்டுகளுக்கு அதிகாரம் இருக்கவேண்டும்.

அதே போன்று இப்போது இருக்கக் கூடிய பஞ்சாயத்து கோர்ட்டுகளை நீக்கிவிடுவது நலம், அது இருப்பதன் காரணமாக பல சச்சரவுகள் ஏற்படுகின்றன, பல தொல்லைகள் ஏற்படுகின்றன என்று சொல்லக் கூடிய நேரத்தில், இந்த பஞ்சாயத்து போர்டுகள் இருக்கும் காரணத்தினாலும் பல சச்சரவுகள் ஏற்படுகின்றன, ஆகையால் இந்த பஞ்சாயத்து போர்டு

27th September 1958] [Sri V. K. Kothandaraman]

களை தேவையில்லை என்று சொல்லலாமா என்பதை சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். ஆகவே தான் மேலும் மேலும் மக்களுக்கு அதிகாரம் கொடுக்கவேண்டும் என்று சொல்லக்கூடிய நேரத்தில், இருக்கக் கூடிய அதிகாரங்களையும் பல காரணங்களைக் காட்டி நீக்கக் கூடிய அளவுக்கு நிலைமை ஏற்படுமானால் அவ்வளவு சரியல்ல. அது ஜனநாயக முறைக்கு நேர் விரோதமான காரியமாகும். பஞ்சாயத்து கோர்ட்டுகள் இருக்கவேண்டும், அதற்கு மேலும் அதிகாரங்களை வழங்கவேண்டும் என்று தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI C SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இங்கு பஞ்சாயத்துக்களுக்குக் கொடுத்திருக்கக் கூடிய அதிகாரங்களைப் பற்றி விரிவாக பல அங்கத்தினர்கள் விரிவுரை ஆற்றினார்கள் (சிரிப்பு)......

SRI A. GOVINDASAMY : நீங்கள் தெளிவுரை ஆற்றுங்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது கொடுத்திருக்கக் கூடிய அதிகாரங்கள் போதாது, இன்னும் அதிகப்படியான அதிகாரங்களைக் கொடுக்க வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையில் பல யோசனைகள் சொல்லப்பட்டன. இன்றைக்கு இந்த அதிகாரங்கள் 63-வது விதியிலும், 64-வது விதியிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. 63-வது விதியிலே என்னென்ன காரியங்களை அவர்கள் கட்டாயம் செய்தாகவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றன. 64-வது விதியிலே எந்தெந்த வேலைகளை அவர்கள் விரும்பினால் செய்யலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இப்போது அதிகமான அதிகாரங்களைக் கொடுக்க வேண்டுமென்று விவாதத்திலே குறிப்பிட்டதை, இரு பகுதிகளாகப் பிரித்து பதில் சொல்ல விரும்புகிறேன்.

முதல் முதலாக, கோர்ட்டுக்களுக்கு இருக்கக் கூடிய அதிகாரங்களை ஸிவில் கோர்ட், கிரிமினல் கோர்ட் அதிகாரங்களை இந்த பஞ்சாயத்துக்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று பல அங்கத்தினர்கள் வற்புறுத்தி எடுத்துச் சொன்னார்கள். நாம் இப்போது கொண்டிருக்கக் கூடிய அடிப்படைத் தத்துவம், நீதியும் நிர்வாகமும் பிரிக்கப்பட வேண்டுமென்பது. நீதியையும், நிர்வாகத்தையும் பிரித்து வைத்து விட்டோம் என்று பல இடங்களில் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இப்போது நீதியையும், நிர்வாகத்தையும் ஒன்றாகச்செய்ய வேண்டுமென்று பல்வேறு அங்கத்தினர்கள் வலியுறுத்திப் பேசினார்கள். அப்படிச் சொன்னால், ஏன் இந்தச் சபைக்கு எல்லாவற்றிற்கும் மேலான இந்தச் சபைக்கு நீதி வழங்கும் அதிகாரத்தைக் கொடுக்கக் கூடாது ? இந்தச் சபையின் மீது அவநம்பிக்கையா ? நீதியைச் செலுத்துவதிலே இரண்டு அடிப்படைகள் இருக்கின்றன. ஒன்று, விருப்பு–வெறுப்பு இல்லாமல், யார் வாதி, யார் பிரதிவாதி என்று கவனிக்காமல், சட்டம் எப்படி இருக்கிறதோ, நீதி எப்படி இருக்கிறதோ அந்த முறையில், பாரபட்சமற்ற முறையில் நீதியை வழங்கவேண்டும். மற்றொன்று நீதி வழங்கப்படுவது மட்டுமல்ல, நீதி வழங்கப்படும் என்ற எண்ணம், என்ற தைரியம் எல்லோர் மனதிலும் ஏற்பட வேண்டும். Justice should not only be done but should appear to be done also. ஆக, இன்றைக்கு இப்பேர்ப்பட்ட ஒரு நம்பிக்கை ஏற்படக்கூடிய முறையில் யார் நீதியை வழங்கினால் இந்த நம்பிக்கை ஏற்படும் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். தேர்தலிலே நின்று சில மக்களின் ஆதரவைப் பெற்று வந்தவர்கள், மறுபடியும் மக்களின் ஆதரவைப் பெற்று பதவிக்கு வரவேண்டும் என்று விரும்புபவர்கள், பாரபட்சமற்ற முறையில் நீதி வழங்க முடியுமா என்று பார்க்கவேண்டும். ஏதோ ஒரு சிலர், இத்தகைய சூழ்நிலையில் கூட, இந்த நிர்ப்பந்தங்களுக்கு அப்பாற்பட்டு நீதி வழங்கும் தன்மை படைத்தவர்களாக இருக்கலாம். "எனக்கு மறுபடியும் தேர்தலானாலும் பர்வாயில்லை, தேர்தலாகாவிட்டாலும் பரவாயில்லை" என்று நீதி எதுவோ அதைத் தான் செய்வேன் என்று சொல்லக் கூடியவர்கள் இருக்கலாம். ஆனால் மக்களுக்கு, தேர்தலில் நின்று வந்தவர்கள், இனிமேலும்

[Sri C. Subramaniam] [27th September 1958

தேர்தலில் நின்று மக்களுடைய ஆதரவைப் பெற விரும்புகிறவர்கள், அவர்களால் நீதி வழங்கப்படுமா என்ற அச்சம் கொள்ளக் கூடிய நிலைமை ஏற்படும். உண்மையிலேயே நியாயம் வழங்கப்பட்டாலும் கட்சிப் பிரதிகட்சி ஏற்பட்டு விடும். மக்களுக்கு பயம் ஏற்படக்கூடிய சூழ்நிலை இதிலே இருக்கிறது. உண்மையில் நடந்தாலும் நடக்கலாம், நடக்காமல் இருந்தாலும் இருக்கலாம். இருந்தாலும் மக்களிடம் அச்சம் ஏற்பட்டு விடுகிறது. தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் நீதியைச் செலுத்துவதிலே இடம் பெறக் கூடாது என்ற அடிப்படைத் தத்துவத்தை ஒப்புக் கொண்டிருக்கிறோம். பல இடங்களிலே நீதிபதிகளைத் தேர்ந்தெடுக்கும் முறை இருக்கிறது என்பதையும் நான் உணர்வேன். ஆனால் அங்கெல்லாம் அதிலேயுள்ள சங்கடங்களை உணர்ந்திருக்கிறார்கள் என்பது பல்வேறு அறிக்கை மூலமாக நமக்குத் தெரியவருகிறது. நீதி வழங்குவது என்பது மெஜாரிட்டி, மைனாரிட்டி
12-40 பார்த்து முடிவு செய்யக்கூடிய விஷயமல்ல. சில இடங்களிலே
p.m. " Peoples Court " என்று ஏற்படுத்தி பெருவாரியான மக்கள் சொல்வதினாலே, ஒருவன் குற்றவாளியாக இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, தூக்கிலிட விடவேண்டுமென்று சொன்னால், தூக்கிலிட விடவேண்டும் என்று அவர்களின் முடிவை ஏற்றுக்கொள்கிறார்கள். பெரும்பான்மையான மக்கள் அவ்வாறு நினைக்கிறபொழுது, அதை மீறி எப்படிச் செய்ய முடியும் என்ற முறையில் செய்கிறார்கள். ஆனால் அந்த முறையை நாம் ஏற்றுக்கொள்ளவில்லை. அந்த மாதிரி முறையை ஏற்றுக்கொண்டிருப்போமேயானால், அரசியல் சட்டத்தையே மாற்றி அமைக்கவேண்டி வரும். ஆனால் இப்பொழுது இருக்கக்கூடிய முறையில் நீதியையும், நிர்வாகத்தையும் பிரித்திரிக்கிறோம். நீதி வழங்குவது மெஜாரிட்டி, மைனாரிட்டி விஷயமில்லை. பாரபட்சம் இல்லாத முறையிலே நீதியைச் செலுத்தவேண்டும். மேலும் யார் நீதி வழங்க வேண்டுமென்று கோருகிறார்களோ, அவர்களுடைய மனதிலே பாரபட்சமற்ற முறையிலே நீதி வழங்கப்படும் என்ற நம்பிக்கை எழுகிற வகையிலே இந்த நீதி அமைப்பை ஏற்படுத்தவேண்டிய அவசியம் இருக்கிறது. தவிர, சில விஷயங்களிலே சட்ட நுணுக்கங்களை அனுசரித்தும் முடிவு செய்யவேண்டியதாக இருக்கலாம். இதற்கு ஓரளவு பயிற்சி பெற்றவர்கள் அவசியம் என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். இவற்றையெல்லாம் மனதில் கொண்டுதான், ஒரு நிர்வாகத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்படுகிற குழுவுக்கு நீதி வழங்கக்கூடிய அதிகாரம் கொடுப்பது தவறு என்பது என்னுடைய கருத்து. இதிலே நான் ஆவேசப்பட்டு பேசுகிறேன் என்று எண்ணிவிடக்கூடாது. ஒரு அடிப்படையானக் கொள்கை இதிலே எழுவதினால் ஒருவேளை நான் ஆவேசமாகப் பேசுவதாக இருக்கலாம். எது தவறு என்று நினைக்கிறேனோ அந்த மாதிரி விஷயங்களில் ஆவேசமாகப் பேசுவது என்னுடைய இயற்கையாக இருக்கிறது. அது தவறு என்று கருதினால், என்னுடைய குறையை ஏற்றுக்கொண்டு, நான் இங்கே இருக்கிற வரையில் அதைப் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்கே குற்றம் குறை இருக்கிறதோ அங்கே ஆவேசம் ஏற்படுகிறது. என்னுடைய அபிப்பிராயம் தவறாகவும் இருக்கலாம்.

அடுத்தபடியாக, கனம் பழனிசாமி அவர்களும், கனம் கோதண்டராமன் அவர்களும் தரிசாக இருக்கக்கூடிய நிலங்களை சாகுபடி செய்வதற்கு பஞ்சாயத்திற்கு அதிகாரம் கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இது நன்றாக இருக்கிறது. தரிசு நிலம் இருக்கிறது, உடனடியாக அதைச் சாகுபடிக்குக் கொண்டு வரவேண்டும். பஞ்சாயத்திலே நிர்வாக அமைப்பு இருக்கிறது, அதனிடத்திலே ஒப்படைத்து விட்டால் என்ன, என்று மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்பொழுது ஒரு சமயம் ஒப்புக்கொள்ளக்கூடியதாக இருக்குமோ என்று தோன்றலாம். ஆனால் இதை யோசித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கு 10 ஏக்கரா தரிசு நிலம் இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். இதைச் சாகுபடிக்கு கொண்டு வரவேண்டுமென்று சொன்னால், அதை நிர்வகிப்பதற்காக இயந்திரம் அங்கே இருக்கிறதா என்பதைப் பார்க்கவேண்டும். மேலும், இதற்கு யார் பொறுப்பாக இருந்து சாகுபடி செய்வது? 10 ஏக்கராவை சாகுபடி செய்வதில் 1,000 ரூபாய் நஷ்டமாகி விடுகிறது

27th September 1958] [Sri C. Subramaniam]

என்று வைத்துக்கொள்வோம். அதற்குப் பொறுப்பு ஏற்றுக்கொள்ளக் கூடியவர்கள் யார் ? ஆகவே, பஞ்சாயத்து நேரடியாக இதை எடுத்து நிர்வகிப்பது முடியாத காரியம். இதை எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. அடுத்தபடியாக, அதைப் பிரித்துக் கொடுத்து ஏற்பாடு செய்யவேண்டுமென்றால், அதை பஞ்சாயத்து செய்யவேண்டுமா அல்லது மற்றவர்கள் செய்யவேண்டுமா என்பதைப்பற்றி யோசிக்கவேண்டும். பஞ்சாயத்து எடுத்து சாகுபடி செய்ய முடியாத நிலையிலே, அதை வழங்கு வதற்கு அது சரியான இயந்திரமாக இருக்குமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். நினைத்தவர்களுக்கு நினைத்தபடி கொடுப்பதை விட்டு விட்டு, கொள்கை அடிப்படையிலே, இந்த சபையின் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ள சர்க்காரே, அதை நிர்ணயிப்பது தான் சரியான முறை. அதற்கான ஒரு கொள்கையை வகுத்து, அதன்படி செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, விவசாயம் பெருகுவதற்கு என்ன செய்வது என்று சொன்னார்கள். விவசாயம் பெருகுவது என்பது, ஆங்காங்கு இருக்கக் கூடிய விவசாயிகள் எந்த அளவுக்கு பல வசதிகளைப் பெற்று அவர் களுடைய தொழிலை நடத்த முடிகிறதோ, அந்த அளவுக்கு உற்பத்தி பெருகும். விவசாயிகளுக்கு பல வசதிகள் செய்து கொடுப்பதன் மூலம் விவசாயத்தின் தரத்தை உயர்த்தி, உற்பத்தியைப் பெருக்க முடியும். விவசாய அபிவிருத்திக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ—உரம் வழங்கு வது, கருவிகளை வழங்குவது, கூட்டுறவு சங்கங்களின் மூலம் பணவசதி செய்து கொடுப்பது, நல்ல விதைகளைக் கொடுப்பது—இம்மாதிரி எல்லா விதமான பொறுப்புகளையும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில், உத்தி யோகஸ்தர்களை நியமித்து, ஏற்பாடு செய்ய வேண்டுமென்ற கருத்தை ஒட்டி, தேசீய அபிவிருத்தித் திட்டத்திலே இருக்கக்கூடிய எல்லா விதமான பணிகளையும், பொறுப்புகளையும் அவர்களே ஏற்றுச் செய்யவேண்டு மென்று பின்னர் வரக்கூடிய 66-வது பிரிவிலே ஏற்பாடு செய்திருக்கிறோம். மேலெழுந்தவாரியாகப் பார்ப்பதற்கு நன்றாக இருக்கிறது என்ற முறையில் இதைச் செய்வோமேயானால், பின்னர் கஷ்டங்கள் விளையும். நல்ல பலனை எதிர்பார்க்க முடியாது. ஆகவே கனம் பழனிசாமியின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். மற்ற திருத்தங்களையும் வற்புறுத்தவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, "registration of births and deaths"-ஐப் பற்றிச் சொல்லப்பட்டது. இதற்கு கணக்கு வைப்பது கிராம அதிகாரிகள் தான். ஆனால் பல்வேறு திட்டங்களை நிறைவேற்றுவதற்கு, பல்வேறு புள்ளிவிவரங்கள் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு அவசியமாக இருக் கிறது. கிராம அதிகாரிகள் ரெஜிஸ்டிராருக்கு கணக்கை அனுப்புவதோடு, ஒரு நகலை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கும் அனுப்ப வேண்டுமென் பது தான் சர்க்காருடைய திட்டம். இந்த வேலையை கிராம அதிகாரி களிடத்திலிருந்து எடுப்பதாக உத்தேசம் இல்லை. பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு புள்ளி விவரங்கள் இருக்க வேண்டுமென்பதற்காக, அந்தக் கணக்கை வைத்துக்கொள்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது சம்பந்தமான திருத்தத்தையும் வற்புறுத்த வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

The amendment of Sri M. P. Subramaniam was, by leave, withdrawn.

Clause 63 was put and carried.

*Clause* 64

MR. SPEAKER : The motion is—

"That Clause 64 do stand part of the Bill".

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move :—

" In clause 64, *for* item (*j*), *substitute* the following :—

' (*j*) the construction of works of public utility and the provision of other facilities for the safety, health, comfort, convenience, culture or recreation of the inhabitants of the village or town. '

*SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து யூனியனின் அலுவல்களைக் குறிக்கும்பொழுது, பல பஞ்சாயத்துகளிலே பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் வழங்கி, அதனைப் பராமரிக்கிற பொறுப்பானது பஞ்சாயத்துகளிடம் ஒப்படைக்கப்படுறது என்று அறிகிறோம். அத்தகைய பராமரிப்புச் செலவை இந்த பஞ்சாயத்துகள் பொறுக்கமுடியாதபடி அவைகளுடைய நிதி நிலைமை இருக்கிறது. இன்றைக்கு நாம் சுதந்திரம் அடைந்தும் பல கிராமங்களிலே குடி தண்ணீர் வசதி இல்லாமலிருக்கிறது. பெரிய நகரங்களிலும், டவுன்களிலும், முனிசிபாலிட்டிகளும், மேஜர் பஞ்சாயத்துகளிலும், அங்குள்ள நிதி நிலைமையை ஒட்டி, குடி தண்ணீர் வசதி செய்துகொடுத்து, அதைப் பராமரிப்பதற்கான வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. சிறு கிராமங்களிலே இத்தகைய நிதி வசதி இல்லாததால் குடி தண்ணீர் வசதியில்லாமல் இருக்கிறது. பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் வசதிசெய்து, அதைப் பராமரிப்பதற்கான பொறுப்பையும் பஞ்சாயத்து கவுன்சிலிடத்தில் ஒப்படைப்போமேயானால், எந்தெந்த கிராமங்களுக்கு வசதி செய்துகொடுக்க வேண்டுமோ, அந்த வசதியைச் செய்துகொடுத்து, பராமரிப்புச் செலவை ஓரளவுக்கு யூனியன் கௌவுன்சில் பொதுவில் ஏற்றுக்கொள்ள வழி ஏற்படும். ஆகவே இந்தத் திருத்தத்தைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAN : இங்கே திருத்தவேண்டியது ஒன்றுமில்லை. கனம் அங்கத்தினர் சொன்ன சில கருத்துக்கள் ஒப்புக்கொள்ளக்கூடியவையாக இருக்கின்றன. சில ஒப்புக்கொள்ள முடியாதவையாக இருக்கின்றன.

The amendment was put and carried.

Clause 64, as amended, was put and carried.



*Clause* 65.

MR. SPEAKER : The motion is—

" That Clause 65 do stand part of the Bill ".

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move :

" In the clause, *for* item (*e*), *substitute* the following, namely :—

' (*e*) (1) the opening and maintenance of and expansion or improvement of elementary schools up to V Standard.

(2) taking over of all schools under private management :

Provided that the Government shall take over Elementary schools above V Standard.' "

SRI N. MARUDACHALAM : I second the amendment.

27th September 1958]

SRI M. P. SUBRAMANIAM : Sir, I move :

*After* item (*n*), *add* the following, namely :—

"(*o*) the opening and maintenance of minor irrigation sources within the area of the panchayat union."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

**SRI V. K. KOTHANDARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, 12-50 p.m.
தனிப்பட்டவர்கள் நடத்தக்கூடிய பாடசாலைகள் இன்றைய தினம் சரியாக நடக்கவில்லை என்று சர்க்காருக்கு எத்தனையோ புகார்கள் வந்துக் கொண்டிருக்கின்றன என்பது தெரிந்த விஷயம்.

(Deputy Speaker in the Chair)

உபாத்தியாயர்கள் மிகவும் மோசமான நிலையில் நடத்தப்படுகிறார்கள். நினைத்தபோது உபாத்தியாயர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டு மானேஜ்மெண்டார்கள் அவர்களுக்கு தேவைப்படுகிறவர்களை நியமித்திக் கொள்ளுகிறார்கள். சம்பளத்தைப் பொறுத்தமட்டில், சம்பளத்தை குறைத்துக் கொடுத்து அதிகப்படியான சம்பளத்திற்கு ரசீது வாங்கக்கூடிய நிலைமை இருக்கிறது. இதுபோன்ற பாடசாலைகள் மிகவும் மோசமான நிலையில் இருப்பதன் காரணமாக ஐந்தாவது வகுப்பு வரையில் உள்ள தனியார் நடத்தும் பாடசாலைகளை பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களே எடுத்து நடத்தும்படி விட்டுவிட்டு அதற்குமேல் இருக்கக்கூடிய பாடசாலைகளை சர்க்காரே எடுத்து நடத்தவேண்டும் என்று என்னுடைய திருத்தம் கூறுகிறது. அதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**SRI M. P. SUBRAMANIAM :** ஐயா, நான் கொடுத்திருக்கக் கூடிய திருத்தம், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்றாக சிறிய நீர்ப்பாசன திட்டங்களை துவக்குவதும், அவைகளை நல்ல முறையில் பராமரிப்பதும் சேர்க்கப்பட வேண்டுமென்பதுதான். வட்டார அபிவிருத்தித் திட்டங்களின் கீழ் செய்யக்கூடிய வேலைகளில் இந்த பஞ்சாயத்து யூனியன்கள் சேர்ந்து செயல்படுவதுதான் முக்கிய நோக்கமாக, முக்கிய அம்சமாக நாம் குறிப்பிட்டிருக்கிறோம். விவசாய அபிவிருத்தி செய்யவேண்டும் என்பதையும், அதுபோலவே அது சம்பந்தமான பல காரியங்களையும் செய்யவேண்டும் என்பதையும் முக்கியமாக இந்த கட்டத்தில் குறிப்பிடுகிற காரணத்தினால், நீர்ப்பாசனத் துறையிலே ஒவ்வொரு வட்டாரத்திலும் அங்குள்ள சாதக பாதகங்களை ஆராய்ந்து, வட்டார வளர்ச்சித் திட்டத்தின் கீழ் வேலை செய்யக்கூடிய என்ஜினீயர் அவர்களின் துணைகொண்டு எங்கெங்கே சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைத் துவக்க முடியும் என்று பரிசீலனைசெய்து அங்கே அவைகளை துவக்குவதற்கும் அந்த நீர்ப்பாசனத் திட்டங்களைப் பராமரிப்பதற்கும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்பதை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஏற்கனவே சமுதாய வளர்ச்சி திட்டத்தின் கீழ் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்ட பல்லாயிரக் கணக்கான ரூபாய் செலவு செய்யப்படவில்லை என்பதை பல சந்தர்ப்பங்களில் நான் குறிப்பிட்டிருக்கிறேன். இதற்காக குறிப்பிட்ட அளவு தொகை பூராவும் செலவு செய்யப்படாமல் வேறு இனங்களுக்காக செலவு செய்யப்படுகின்றது. ஆனால், அரசாங்கம் இதற்காக ஒரு பி.டபிள்யூ.டி. இலாகா இருப்பதன் காரணமாக இந்த வேலையை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடம் ஒப்படைக்க வேண்டியதில்லை என்று சொல்லலாம். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கு விவசாய உற்பத்தியோடு தொடர்பு உடைய காரியங்களில் செயல்படுவதற்கு பூரண அதிகாரம் கொடுத்திருக்கும் காரணத்தினாலே சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை நல்ல முறையில் பராமரிப்பதற்கும், புதியதாக உண்டாக்குவதற்கும் அவைகளுக்கு அதிகாரத்தைக் கொடுப்பது மிகவும் பொருத்தமாகும். ஆகவே, இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[27th September 1958

SRI M. S. SELVARAJAN : இந்த மசோதாவின் பிரகாரம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு ஜில்லா போர்டு வகித்து வந்த ஆரம்பப் பாடசாலை சம்பந்தப்பட்ட எல்லா அதிகாரங்களும் வழங்கப்பட்டிருக்கின்றன. அதே நேரத்தில் கூடுதலாக மற்றொரு அதிகாரத்தையும் வழங்கக் கருது கிறோம். தனிப்பட்டவர்கள் நடத்தக்கூடிய பாடசாலைகளுக்கு மானியம் வழங்கும் பொறுப்பும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் கையில் விடப்பட்டிருக்கிறது. இந்த ராஜ்யத்தைப் பொறுத்த வரையில், மற்ற பல ராஜ்யங்களை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இந்த ராஜ்யத்தில்தான் ஆரம்பப் பள்ளிகளில் வேலை செய்யக்கூடிய பெண்களின் தொகை அதிகமாகிக் கொண்டிருக்கிறது. ஆரம்பப் பாடசாலைகளில் வேலை செய்யக் கூடிய பொறுப்பை பெண்களுக்கே கூட விட்டுவிடலாம் என்ற கருத்து நிலவி வரும் காலம் இது. இந்த நேரத்தில் ஜில்லா போர்டுகளுக்கு ஒரு மாற்று வழி என்ற நிலையில், பஞ்சாயத்து யூனியன்கள் கையில் ஆரம்பப் பாடசாலைகளின் பொறுப்பை ஒப்படைக்கவேண்டிய அவசியமும், நிர்ப்பந்தமும் இருக்கிறது. ஏன் புதியதாக ஒரு அதிகாரத்தை, அதாவது தனிப்பட்டவர்கள் நடத்தக்கூடிய ஆரம்பப் பாடசாலைகளுக்கு மானியம் வழங்கும் அதிகாரத்தையும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் பொறுப்பில் விடவேண்டும் என்ற கேள்விக்கு அரசாங்கம் தகுந்த பதில் சொல்லுவார்கள் என்று நான் நினைக்கிறேன். ஆரம்பப் பாடசாலைகளுக்கு கிராண்டு வழங்கக்கூடிய பொறுப்பை பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கு விடு வதன் மூலமாக பஞ்சாயத்து கவுன்சில் தொடர்புள்ள அங்கத்தினர்கள் அத்தனை பேர்களுக்கும் அந்தப் பாடசாலைகள், சம்பந்தப்பட்ட மட்டில் விசேஷ அக்கரை இருக்கலாம் என்ற கருத்தில் அடிப்படையில் இந்த அதிகாரத்தை அவர்களுக்கு வழங்கக் கருதலாம் என்றாலும், அதிலே சில ஆபத்துகள் அடங்கியிருக்கின்றன என்பதை மறந்துவிடக் கூடாது. ஆகவே, ஆரம்பப் பாடசாலைகள் சம்பந்தப்பட்டமட்டில் சிந்தித்து ஒப்பு நோக்குதல் வேண்டும். என்னைப் பொறுத்த மட்டில், மற்ற ஜில்லா போர்டுகளோடு சரிசமமாக இயங்கக் கூடிய அளவிற்காவது திருநெல்வேலி ஜில்லா போர்டு பாடசாலைகள் நடந்து வந்தன என்பதை சந்தோஷமாகச் சொல்ல முடியும். அத்தகை பாடசாலைகளில் பலவற்றை விடக்கூட தனியார் நடத்தும் சில பாடசாலைகள் சிறந்து விளங்குகின்றன. அரசாங்க ஆரம்பப் பாடசாலை களுக்கு சமமான நிலைமையில் பல்வேறு உதவி பெறும் பாடசாலைகள் நடந்துகொண்டிருக்கின்றன. ஏதோ ஒன்றிரண்டு இடத்தில் ஒழுங்கீனம் இருப்பது இயற்கையாகவே இருக்கலாம். அப்பேர்ப்பட்ட இடங்களில் அரசாங்கமே ஆசிரியர்களுக்கு நேரடியாக சம்பளம் வழங்கக் கூடிய முறையைப் பின்பற்றலாம். அவசியமான இடங்களில், எங்காவது சிரமம் ஏற்பட்டால், வில்லங்கங்கள் ஏற்பட்டால், தண்டிப்பதற்கு தனி நிர்வாகத்திற்கு "மெயின்டெனன்ஸ் கிராண்டு" கொடுக்கக்கூடிய அதிகாரம் அரசாங்கத்தின் கையில் என்றென்றும் இருந்துவருகிறது. இம்மாதிரி கிராண்டு வழங்கும் பொறுப்பை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் கையில் விடுவதன் மூலம், அரசியல் கொள்கைகள் உள்ளவர்கள் கையிலே விளையாட்டுக் கருவிகள் போல ஆரம்ப ஆசிரியர்களை ஒப்படைத்து விடக்கூடிய ஒரு துர்ப்பாக்கியமான நிலைமையை சிருஷ்டித்து விடக்கூடாது. அத்தகைய அபாயம் இதில் இல்லையா என்று யோசிக்க வேண்டும் என்பது என்னுடைய பணிவான கருத்து.

பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு மற்றொரு அதிகாரம் வழங்கப் படுகிறது. சிற்சில சந்தைகளை எடுத்து நடத்துவதற்கு அவர்களுக்கு அதி காரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் சிற்சில இடங்களில் வேண்டு மென்றே கூட, அரசியல் காரணங்களுக்காக, கொள்கையில் வித்தியாசம் உள்ளவர்கள் எங்கேயாவது இருக்கும் தர்ம ஸ்தாபனங்கள் நடத்தக்கூடிய சந்தைகளையும் ஆலய நிர்வாகத்திற்காக நடத்தக்கூடிய சந்தைகளையும் கூட எடுத்துக் கொண்டு விடலாம். அம்மாதிரி சந்தைகளில் அடிப்படை யான வருமானத்தைக் கொண்டுதான் ஆலய நிர்வாகம் நடத்தப்பட வேண்டும். அவ்வாறு ஆலய நிர்வாகத்திற்கு என்றே ஒதுக்கப்பட்டி ருக்கக் கூடிய சந்தைகள் சில இருக்கின்றன. அப்பேர்ப்பட்ட இடங்களில் அரசியல் கொள்கை காரணமாக, அரசியலிலே மாற்று அபிப்பிராயம்

27th September 1958] [Sri M. S. Selvarajan]

கொண்டவர்கள் அதிகாரத்திற்கு வரக்கூடிய பஞ்சாயத்து யூனியன் கவுன் சில்கள் வேண்டுமென்றே இத்தகைய மார்க்கட்களை எடுத்துக்கொண்டு, ஆலய நிர்வாகத்தையே கெடுத்துவிடக்கூடிய ஒரு நிலைமை ஏற்படுவதற்கு இடம் இருக்கிறது. இந்த மார்க்கட்டுகளை நிர்வகிக்கும் அதிகாரத்தை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடம் விடுவது சரியான அமைப்பு தானா என்று யோசிக்கவேண்டும். மேலும் பஞ்சாயத்துக்கள் இந்த மார்க்கட்டு களில் 100-க்கு 15 சத விகிதம் வரி வசூலித்துக் கொள்ளக்கூடிய அதிகாரமும் இருக்கிறது. வருமானத்தை அதிகப்படுத்திக் கொள்ளுவதற்கு இதை ஒரு மார்க்கமாகவும் தேடிக்கொள்ளலாம். ஆகவே, இத்தகைய அதிகாரங்களை உபயோகப்படுத்தும்பொழுது இத் தகைய ஸ்தாபனங்களுக்கு பாதுகாப்பு கொடுக்கக்கூடிய அளவுக்கு, ஆலயங் களில் நிர்வாகம் கெட்டுவிடக்கூடாத அளவுக்கு பாதுகாப்பதற்கான வழி வகைகளை சட்ட ரீதியாளுலும் சரி, சட்டத்திற்குட்பட்ட விதிகளின் மூலமா ளுலும் சரி, அரசாங்கம் ஏற்படுத்திக்கொடுக்கும் என்று நம்புகிறேன்.

SRI J. MATHA GOWDER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தனியார் நடத்தக்கூடிய ஆரம்பப் பள்ளிகளுக்கு மான்யம் வழங்கும் அதிகாரம் பஞ்சாயத்து யூனியன்களுக்கு கொடுக்கப்பட்டிருக் கிறது. தனியார் நடத்தக்கூடிய பள்ளிகளுக்கு கொடுக்கக்கூடிய "எய்டு கள்" பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலமாக கொடுக்கப்படுவதால், அந்தப் பள்ளியின் நிர்வாகம் நல்ல முறையில் நடக்கிறதா என்று கண் காணிக்கும் பொறுப்பு யாரிடம் இருக்கிறது என்று தெரியவில்லை. இப் பொழுது இருக்கும் முறைப்படி அந்தப் பொறுப்பு கல்வி அதிகாரியிடம் இருக்கிறது. கல்வி அதிகாரியே கிராண்டுகள் வழங்குவதால், ஏதாவது தவறுகள் ஏற்பட்டால், எம்.ஜி. கிராண்டை "கட்" செய்துவிடுவார்கள். அல்லது "டீசிங் கிராண்டை" "கட்" செய்துவிடுவார்கள். இந்த கிராண் டுகள் வழங்கும் அதிகாரம் இனிமேல் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு வழங்கப்பட்டிருப்பதால், இந்தப் பள்ளிகளில் நிர்வாகம் தவறுகள் செய் தால் அவைகளைக் கண்டிக்கும் அதிகாரம் யாரிடம் இருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுமட்டுமல்லாமல் அவர்களுக்கு கொடுக்கக்கூடிய 15 சத விகிதம் மானேஜ்மெண்டு கிராண்டை இந்தக் கவுன்சில் குறைத்துவிடலாம், அல்லது "அபாலிஷ்" செய்துவிடலாம் என்று நோக்கம் இருப்பதாக எனக்குத் தெரிகிறது. அப்படி 15 சத விகிதம் கொடுப்பதை ஆரம்பப் பள்ளிக் கூடங்களுக்கு நிறுத்திவிட்டால், தனியார் நடத்தும் பள்ளிக்கூடங்கள் உற்சாகத்துடன் நடைபெருது. அந்தப் பள்ளிக்கூடங்களை சர்க்காரே எடுத்து நடத்திக்கொள்ளலாம் என்றிருந்தால், அது நல்லது. இப்பொழுது 5 சத விகிதம் முதல், 25 சத விகிதம் வரை கிராண்ட் கொடுக்கலாம் என்று ஜில்லா கல்வி அதிகாரிகளுக்கு அதிகாரம் இருக்கிறது. இந்தப் பஞ்சாயத்து கௌன்சில் இனி அந்த கிராண்டை கொடுக்குமா, இல்லையா என்று முடிவு செய்யவேண்டும். அப்படி அந்த எம்.ஜி. பஞ்சாயத்து மூலமாக வரும் என்றுல், பள்ளிக்கூடத்தின் பரிசீலனை இப்பொழுது ஜில்லா அதிகாரி, ஸீனியர் இன்ஸ்பெக்டர், ஜூனியர் இன்ஸ்பெக்டர் இவர்கள் தங்கள் ரிப் போர்ட்டை பஞ்சாயத்து யூனியன்களுக்கு சமர்ப்பிக்கவேண்டுமா என்ப தெல்லாம் முடிவு செய்யவேண்டும். அதைப் போலத்தான் ஆடிட் சம் பந்தமாகவும், இனிமேல் அவர்கள் தங்கள் ரிபோர்டுகளை பஞ்சாயத்து கௌன்சில்களுக்குத் தரவேண்டுமா? இதையும் விளக்கவேண்டும். என்னைப் பொறுத்தவரையில் தனியார்களுக்கு பஞ்சாயத்து கௌன்சில் கொடுப்பது என்பது உசிதமில்லை. கல்வி அதிகாரி அவர்கள் மேல்பார்வை செய்வதுதான் சரி. ஜில்லா போர்டிலுள்ள பள்ளிக்கூடங்களை பஞ்சாயத்து யூனியனுக்கு மாற்றுவது சரியாளுலும், தனியார் பள்ளிக்கூடங்களை அவர் களிடம் கொடுப்பது அவசியமா, சரியா, என்பதைப் பற்றி யோசிக்க வேண்டும். 1-00 p.m.

SRI A. GOVINDASAMY: கனம் உப தலைவர் அவர்களே, பஞ்சாயத்து கவுன்சிலுக்கு என்னென்ன வேலை கொடுக்கப் படுகிறது என்று இங்கே சொல்லப்படுகிறது. இதிலே "Training and Employment of Vaccinators, etc." என்று ஒரு வாசகம் இருக்கிறது.

அப்படியானால், ஹெல்த் டிபார்ட்மெண்ட் தனித் தனியாகப் பிரிக்கப்படுகிறது என்று அர்த்தமா? அதை விளக்கவேண்டும். ப்ரொவிஷன் ஆப் ஹௌஸ் ஸைட் என்றும் இருக்கிறது. இப்பொழுது, ஆதித் திராவிடர்களுக்கு மனைக்கட்டு ஏற்பாடு ஹரிஜன் வெல்பேர் டிபார்ட்மெண்டாரால் செய்யப்படுகிறது. அந்த அதிகாரம் இப்பொழுது, ப்ளாக் ஏரியாவில் பஞ்சாயத்து கௌன்சிலில் கொடுக்கப்படுமா என்பதையும் விளக்கவேண்டும்.

இந்த பஞ்சாயத்து மசோதா வருவதில் முக்கிய நோக்கம், "உணவு உற்பத்தியைப் பெருக்கவும்", "ஜனப் பெருக்கத்தைக் குறைக்கவும்" என்று எடுத்த எடுப்பில் சொல்லப் பட்டிருக்கிறது. ஆனால், இங்கே 65-(ஸி)-ல், "Offering advice and assistance" என்று ஒரு வாசகம் இருக்கிறது. குடும்பக் கட்டுப்பாட்டை நிறைவேற்ற தனியாக ஆஸ்பத்திரிகளை நிறுவப் போகிறோம் என்கிற நோத்தில், அதற்கேற்ற உத்திரவாதம் இல்லாமல், "ஆலோசனை" கொடுக்கும் என்ற அளவில் இருப்பது, மசோதாவின் உட்கருத்து எப்படி நிறைவேறும் என்று விளக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, உற்பத்தியைப் பெருக்க இந்த மசோதா வழிவகை செய்யும் என்னும் நோத்தில், இங்கே 65-(m)-ல் "Improvement of agriculture, agricultural stock and the holding of agricultural shows" என்று இருக்கிறது, உள்ளபடியே விவசாயத்திற்கு உதவிசெய்ய ஆங்காங்கே, விதைப் பண்ணைகள் சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டு, விவசாய டிபார்ட்மெண்டார் கிராமத்தார் உதவியுடன் நல்ல விதைகளை உற்பத்தி செய்து விநியோகிக்கவேண்டும் என்பது கருத்து. ஆனால் பல இடங்களிலே, நல்ல விதைகளை உற்பத்தி செய்வதற்குப் பதிலாக, குத்தகை போக பாக்கி நெல்லை விற்றுவிடுகிறார்கள். விவசாய டிபார்ட்மெண்டார் பல இடங்களில் புறம்போக்கு நிலங்களை எடுத்துக்கொண்டு, பயிரிடமுடியாமல், குத்தகை மட்டும் கொடுத்துவரும் நிலைமை இருக்கிறது. விவசாயிகளுக்கும் யாதொரு நலனையுங்காணோம். ஆகவே, பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து கவுன்சிலுக்குத்தான் அந்த சீட் பாம் வேலை கொடுக்கவேண்டுமென்ற வாசகத்தையும் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

65 (k)-ல் "The Registration of Births and Deaths" என்று இருக்கிறது. இங்கே, "Maintenance of Births and Deaths" என்ற வாசகத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏற்கனவே, மணியக்காரர் பிறப்பு, இறப்புக் கணக்கு வைக்கிறார்கள். இங்கே "Maintenance" என்ற வார்த்தையில்லாவிட்டால், மசோதாவின் உட்கருத்து அமலாகாமல் போய்விடும்.

அடுத்த படியாக, 65 (a)-ல், "the construction, repair and maintenance of all public roads in the panchayat union which are classified as panchayat union roads and of all bridges, culverts, road-dams and causeways on such roads.' என்று இருக்கிறது. எல்லா ரோடு, கல்வர்ட், இவைகளைப் பஞ்சாயத்து கவுன்சிலிடம் கொடுப்பதானால், ஹைவேஸ் டிபார்ட்மெண்டார் அவர்கள் பாலங்களைச் செய்ய சாத்தியமில்லாமல் போய்விடும். டிபார்ட்மெண்டார் குறுக்கிட்டு, நீங்கள் இதில் தலையிடக்கூடாது எனலாம்; மேலும், இந்த ஏற்பாட்டினால், செலவும் அதிகமாகும் என்று தோன்றுகிறது. ஆகவே, பஞ்சாயத்துக் கவுன்சிலுக்கு இந்த விஷயத்தில் விதிவிலக்கு அளிக்க வேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : உதவி சபாநாயகர் அவர்களே, கடைசியாக, கனம் கோவிந்தசாமி சொன்ன விஷயத்தில், "construction repair, maintenance of all roads . . . which are classified as panchayat union roads என்று இருக்கிறது. இதனால், ஹைவேஸ் டிபார்ட்மெண்டில் இருக்கும் ரோடுகள் இதில் வரா.

27th September 1958] [Sri C. Subramaniam]

அடுத்தபடியாக, "Registration of births and deaths" பற்றிச் சொன்னார்கள். இப்பொழுது, அதற்கென்று ஒரு தனிச் சட்டம் இருக்கிறது. ஒரு ரெஜிஸ்ட்ராரும் இருக்கிறார். ஆகவே, அது அந்த அடிப்படையில் செய்யப்படுகிறது. அந்த சட்டத்தை மாற்றுவதாக இல்லை இங்கே. ஆனாலும், இப்பொழுது இருக்கும் பிரிவை விளக்கமாகச் சொல்லலாம். அதற்கு "maintenance of births and deaths . . . . . . . " என்று மட்டும் போட்டால் சரியாக இருக்காது. அது சரியான வாசகம் இல்லை. "maintenance of statistics relating to births and deaths" என்று போட்டால் நன்றாக இருக்கும். ஆகவே, கிளாஸ் 65, ஐட்டம் (k)-க்கு பதிலாக "maintenance of statistics relating to births and deaths" என்று போட்டுக் கொள்ளலாம் என்ற திருத்தத்தை பிரேரேபிக்கிறேன்.

அடுத்தபடியாக கனம் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள், "opening and maintenance of minor irrigation sources" என்பதைப் பற்றிச் சொன்னார்கள். இதிலே, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு என்னென்ன அதிகாரம் மற்ற பிரிவுகளிலும் இருக்கின்றன என்று பார்க்க வேண்டும். 65-வது பிரிவை மட்டும் பார்த்தால் போதாது.

சில அதிகாரங்கள் பஞ்சாயத்துகளுக்கு கொடுக்கப்பட்டிருப்பது மாதிரியே கட்டாயமாக ஒப்படைக்கப்பட வேண்டிய பொறுப்புகள் அவர்களிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் இஷ்டப்படி அதைச் செய்யலாம். அதற்கு வேண்டிய அதிகாரம் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சில பொறுப்புகளை அவர்களிடத்தில் சர்க்கார் ஒப்படைக்கும். ஏஜென்சி பேசிஸ்ஸில் சில அதிகாரங்களை கொடுக்க வேண்டுமென்றிருக்கிறது. மைனர் இர்ரிகேஷன் சம்பந்தமாக 84-வது பிரிவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. நாம் எண்களை மாற்றி அமைக்கும்போது அது 85-ஆக வரப்போகிறது. மைனர் இர்ரிகேஷன் சம்பந்தமாக விதியைப்பற்றி சர்ச்சை செய்யும்போது அதை கவனித்துக் கொள்ளலாம். அந்த இடத்தில் மாறுதல் செய்து கொள்ளலாம். அதைப்பற்றி இங்கே பரிசீலனை செய்ய வேண்டியதில்லை. ஏஜென்சி பேஸிஸில் அதைச் செய்ய வேண்டியதாக இருக்கிறது. கட்டாயமாகச் செய்வதற்காக அதிகாரத்தை நாம் அவர்களுக்குக் கொடுக்க முடியாது. சில முக்கியமான விஷயங்கள் இருக்கின்றன. அவைகளைப்பற்றி நாம் கவனிக்க வேண்டியதாக இருக்கிறது. 1-10 p.m.

இப்பொழுது ஆரம்பக் கல்வி விஷயமாக ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் பற்றிய விவாதம் இங்கே நடைபெற்றது. இங்கே கொடுத்திருக்கக்கூடிய விதியின் பூரா கருத்தையும் தெரிந்து கொள்ளாமல் ஒரு சிலர் விவதம் செய்திருக்கிறார்கள். இன்னும் சிலர், அதாவது கனம் கோதண்டராமனைப் போன்றவர்கள், தனிப்பட்டவர்கள் நடத்தக்கூடிய பள்ளிக்கூடத்தை எல்லாவற்றையும் பஞ்சாயத்து கவுன்சில் எடுத்து நடத்த வேண்டுமென்ற கருத்தை அவர் வலியுறுத்தியிருக்கிறார். சில பள்ளிக்கூடங்கள் சரியாக நடைபெறவில்லை, அங்கேயெல்லாம் சில தவறுகள் நடக்கின்றன என்பதைப் பற்றி குறிப்பிட்டு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் எல்லா பள்ளிக்கூடங்களையும் எடுத்து நடத்த வேண்டும் என்று சொன்னார். அதே மாதிரி டிஸ்ட்ரிக்ட் போர்டு நடத்திய பள்ளிக்கூடங்களிலும் சில நன்றாக நடைபெற்றன, சில நல்ல முறையில் நடைபெறாமலும் இருந்திருக்கின்றன. அதே போல் சர்க்கார் நடத்தக்கூடிய பள்ளிக்கூடங்களிலும் சில நன்றாக நடைபெற்று வருகின்றன, சில நன்றாக நடை பெறாமலும் இருக்கின்றன. சில இடங்களில் நல்ல ஆசிரியர்களைப் போடாத காரணத்தால் அப்படி பள்ளிக்கூடங்கள் நல்ல முறையில் நடைபெறாமல் இருக்கலாம். இன்றைக்கு தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக்கூடங்களில் எத்தனையோ நல்ல முறையில் நடக்கின்றன. சில நல்ல முறையில் நடவாமலும் இருக்கின்றன. எத்தனையோ தனிப்பட்டவர்கள் எடுத்து நடத்தும் பள்ளிக்கூடங்கள் எவ்வளவோ நல்ல முறையில் நடைபெற்று வருகின்றன. அவைகள் நாம் பாராட்டக்கூடிய முறையில் பெருமைப்படக்கூடிய அளவில் இருக்கின்றன. ஆனால் அங்கத்தினர் சொல்வதைப்பார்த்தால் கொள்கை அளவில் தான் தனிப்பட்டவர்கள் எடுத்து நடத்தக்கூடாது என்று இருக்கிறது. இப்படிப்பட்டக் கொள்கையையுடையவர்கள் தான்

[Sri C. Subramaniam] [27th September 1958

அப்படிச் சொல்லுகிறார்கள். கல்வியாக இருந்தாலும் சரி, தொழிலாக இருந்தாலும் வேறு எதுவாக இருந்தாலும் சரி தனிப்பட்டவர்கள் எடுத்து நடத்தக்கூடாது என்ற கொள்கையைக் கடைப்பிடிக்கிறவர்கள் தான் இப்படிச் சொல்வார்கள். சர்க்காரே எடுத்து நடத்த வேண்டுமென்ற கொள்கையையுடையவர்கள் தான் இப்படிப்பட்ட கொள்கையை வலியுறுத்துகிறார்கள். தனிப்பட்டவர்கள் எந்த விதமான பொறுப்பும் எடுத்துக் கொள்ளக்கூடாது என்கிற முறையில் அவர்களுடைய கொள்கையை வலியுறுத்துகிற முறையில் அவர்கள் சொல்லுகிறார்கள் என்று நான் நினைக்கிறேன். கல்வியைப் பொறுத்த மட்டில் நம்முடைய ராஜ்யத்தில், மற்ற ராஜ்யத்தைப் பற்றி எனக்கு அவ்வளவாகத் தெரியாது, தனிப்பட்டவர்கள் பள்ளிக்கூடங்களை எல்லா கட்டங்களிலும், ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலிருந்து கடைசி ஆராய்ச்சி கல்லூரி வரையில் நல்ல முறையில் நடத்திக் கொண்டு வருகிறார்கள். கல்வி வளர்ச்சிக்கு அரும் பணி ஆற்றிக் கொண்டு வருகிறார்கள். இன்னும் பணியாற்றிக் கொண்டு வருவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. தனிப் பட்டவர்கள் முயற்சியே கூடாது, அதுவும் கல்வித் துறையில், என்று சொல்வது சரியான கருத்து அல்ல என்பது என்னுடைய உறுதியான கொள்கை. ஆகையால் அதில் தனியாருக்கு இடம் கொடுக்கக் கூடாது என்று சொன்னால் அந்தக் கொள்கையை ஏற்றுக்கொள்வதற்கு இல்லை. அதைப்பற்றி வலியுறுத்தியும் பிரயோசனம் இல்லை என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக கவுன்சிலின் கையில் ஒப்படைக்கப்பட்டது சரியா, அது சரியானபடி நடைபெறுகின்றனவா என்பதைப்பற்றி யார் முடிவு செய்வது, இப்பொழுது இருக்கக்கூடிய கல்வி இலாகாவினுடைய பொறுப்பு என்ன என்பதைப் பற்றியெல்லாம் சந்தேகங்கள் தெரிவிக்கப்பட்டன. பள்ளிக்கூடங்களை நடத்துவதில் இரண்டு விதமான பொறுப்புகள் இருக்கின்றன. ஒன்று மானேஜ்மெண்ட் பொறுப்பு அதாவது நிர்வாகத்தை நடத்தக்கூடிய பொறுப்பு, இன்னொன்று சூபர்வைசிரி பொறுப்பு, அதாவது அதை தணிக்கை செய்யக்கூடிய பொறுப்பு. இதைப் பொறுத்த வரையில் இப்பொழுது இருக்கக்கூடிய கல்வி இலாகா சரியாக இருக்கும். நிர்வாகம் சம்பந்தமாக டிஸ்ட்ரிக்ட் போர்டு செய்து வந்ததைப்போலவே பஞ்சாயத்து யூனியனும் செய்து வரும். நிதி கொடுக்கும் முறையில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு கொடுக்கப்படுமா அந்த முறையில் மானியம் வழங்கப்படுமா என்பதைப்பற்றி பல கேள்விகள் கேட்டார்கள். மான்யம் எப்படி கொடுக்கப்படும் என்பதைப் பற்றி பஞ்சாயத்து சட்டத்தில் நிர்ணயிக்க வேண்டியதில்லை. கல்விச் சட்டத்தில் அதற்கு வேண்டிய விதிகளைச் செய்து கொள்ளலாம். எந்த எந்த ஸ்தாபனங்களுக்கு என்ன என்ன மானியங்கள் கொடுக்கப்பட வேண்டும் என்பதை அங்கே அங்கே கல்வி இலாகாவில் கல்வி சட்டத்தில் இருக்கக் கூடிய விதிகளை அனுசரித்துத்தான் இந்த மானியங்களை வழங்க வேண்டும். அதற்கு என்று ஒரு தனிச் சட்டம் பரிசீலனையில் இருந்து வருகிறது. தனிப்பட்டவர்களுக்கு மானியத்தை குறைக்க வேண்டும் என்றால் குறைக்கவோ அல்லது கூட்ட வேண்டுமென்றால் கூட்டவோ இவைகளைப் பற்றியெல்லாம் அங்கே நிர்ணயிக்கப்படும். கல்விச் சட்டத்தைத் திருத்தி அமைக்கும்போது இதைப்பற்றி முடிவு எடுத்து அதில் இடம் பெறும் என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். சர்க்கார் கொடுக்கக்கூடிய மானியம் முழுவதும் யூனியன் கவுன்சில் மூலமாக வழங்கப்படும் என்கிற ஒன்றுதான் கண்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் இருக்கக்கூடிய அந்த ஏரியாவில் எந்த அளவு கல்வி அபிவிருத்தி ஆகவேண்டும், அதற்கு எவ்வளவு செலவு ஆகவேண்டும் என்கிற சில அளவை நாம் நிர்ணயித்து அந்த அளவுக்குக் கொடுக்கப்படும். கல்வி அபிவிருத்திக்கான காரியங்களைச் செய்வதற்கும் கல்வி அபிவிருத்திக்கு எந்த அளவு நடவடிக்கை எடுத்துக் கொள்ள முடியும் என்பதற்கும் நிர்ணயம் செய்யப்படும். கல்வி அபிவிருத்தி அடைவதற்கும் அதற்காக நிதி திரட்டுவதற்கும் அதற்கான பொறுப்பு இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் கையில் கொடுக்கப்பட்டிருக்கிறது. கல்வி இலாகா இந்த நிர்வாகத்தை நடத்தவேண்டும் என்பதைப் பற்றி கல்விச் சட்டங்களில் விதிகள் அமைக்கப்படும். அதைப்பற்றி அங்கே கவனிக்க வேண்டுமே தவிர இங்கே

27th September 1958] [Sri C. Subramaniam]

அதைப்பற்றி விரிவாகக் கொடுக்க வேண்டிய அவசியமே இல்லை என்ற காரணத்தினால் சுருக்கமாக இங்கே மானேஜ்மென்டே நடத்தலாம் என்றும் அதற்கு வழங்க வேண்டிய மானியம் இந்த யூனியன் கவுன்சில் மூலமாக கொடுக்க வேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த விதிப் பிரகாரமே ஒப்புக்கொண்டு இதை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

The amendment of Sri V. K. Kothandaraman was put and lost.

The amendment of Sri M. P. Subramaniam was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : Now I will put the Government amendment to the vote of the House. The question is—

' *For* the existing item (k) *substitute* the following, namely :—

" (*k*) maintenance of statistics relating to births and deaths ".'

The amendment was put and carried.

Clause 65 as amended was put and carried.

*Clause* 66

DEPUTY SPEAKER : The motion is—

' That Clause 66 do stand part of the Bill ':

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

" *For* clause 66, *substitute* the following clause :—

' 66. *Entrustment of execution of National Extension Service Schemes of community development to panchayat union councils.*—The Government shall as soon as may be after the constitution of a panchayat union council for a panchayat development block under this Act entrust to the panchayat union council subject to such conditions and restrictions as may be specified by the Government the execution in the panchayat development block of the National Extension Service Schemes of community development including in particular all measures relating to the development of agriculture, animal husbandry and village industries organized on an individual or co-operative basis '."

இதில் " **may** " என்று போடப்பட்டிருக்கிற காரணத்தால் ஒரு சமயம் சர்க்கார் செய்தாலும் செய்யலாம், செய்யாமல் விட்டாலும் விட்டு விடலாம் என்கிற காரணத்திற்காக பலர் ஆட்சேபணையைத் தெரிவித்தார்கள். ஆகையால் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் இதை மாற்றி அமைக்க திருத்தத்தைப் பிரேரேபித்திருக்கிறேன்.

SRI A. GOVINDASAMY : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தேசீய அபிவிருத்தித் திட்டத்தையும், சமுதாய நலத் திட்டத்தையும் நிறைவேற்றுவதற்கான அதிகாரங்களை பஞ்சாயத்து யூனியன் கவுன்
சிலுக்கு வழங்குகின்ற நேரத்தில், இந்தத் திட்டங்களை நிறைவேற்று 12-00 p.m.
வதற்காக இருக்கும் அட்வைசரி கமிட்டி மீண்டும் இயங்கி வேலை செய்யுமா? அல்லது பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கே இந்த முழு அதிகாரமும் ஒப்படைக்கப்பட்டு, அட்வைசரி கமிட்டி கலைக்கப்படுமா என்பதற்கு விளக்கம் அறிய விரும்புகிறேன். அந்த அட்வைசரி கமிட்டியும் இருந்து, இந்தப் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலும் இருக்குமானால் ஒன்றுக்கொன்று

முறண்பாடான நிலைமை வரும். ஆகவே, அந்த அட்வைசரி கமிட்டியை அறவே எடுத்துவிட்டு, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடத்திலே அந்த முழு அதிகாரத்தையும் ஒப்படைக்கவேண்டுமென்ற கருத்தை நான் வலியுறுத்துகின்றேன்.

அதற்கடுத்தார்ப்போல், விவசாயத்துறையிலே எல்லாவித வளர்ச்சிக்கும் ஆக்கம் அளிக்கும் முறையிலே இந்தக் கவுன்சில் ஈடுபடும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டிருக்கிறது. சென்ற காலங்களிலேகூட விதைப் பண்ணைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னேன். அதற்கு பதில் தெரிவிக்காவிட்டாலும், மீண்டும் விவசாயத்திற்கு வேண்டிய ஆக்கவேலைகளுக்கு எல்லா வசதியும் தரப்படும் என்று சொல்கிற நிலைமையில், நல்ல பொறுக்கு விதைகள் கொடுக்க வேண்டுமென்ற கருத்து சர்க்காருக்கு இருக்கும் காரணத்தினால், அதனுடைய நிர்வாகத்துக்கான முழு அதிகாரத்தையும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடம் கொடுத்துவிட்டால், நல்ல முறையில் நிர்வகிக்கப்படும். இப்பொழுதிருக்கும் நிலைமை பிரகாரம், விதைப் பண்ணைகளினால் பல அசம்பாவிதங்கள், சங்கடங்கள் இருக்கின்றன. நல்ல நிலங்கள் தேர்ந்தெடுக்கப்படாமலும், தண்ணீர் வசதியே இல்லாத இடங்கள் எடுக்கப்பட்டும், பயிரிடப்படாமலேயே குத்தகை வழங்குகின்றது போன்ற பல நிலைமைகள் இருப்பதால், இந்த நிலைமைகளையெல்லாம் கண்காணிப்பதற்கு நல்ல பொறுக்கு விதைகளை விவசாயிகளுக்குத் தயார் செய்து கொடுப்பதற்கான இந்தப் பொறுப்பு பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கே இருக்கவேண்டுமென்ற கருத்தை நான் இந்த நேரத்தில் வலியுறுத்த விரும்புகிறேன்.

* SRI T. SAMPATH : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவில் 66-வது பிரிவு மிகவும் வரவேற்கத்தக்கது. இந்த பிரிவைத் தெளிவுபடுத்தும் வகையிலே அமைச்சர் அவர்கள் இதற்கு ஒரு திருத்தம் கொண்டுவந்திருக்கிறார்கள். சமுதாய நலத் திட்டங்கள், தேசீய விஸ்தரிப்புத் திட்டங்கள் சம்பந்தமான வேலைகளை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு ஒப்படைக்கக்கூடிய விஷயத்தைப்பற்றிய பிரிவு இது ஜில்லா போர்டுகளை நாம் கலைத்துவிட்டோம். அந்த ஜில்லா போர்டுகள் பொறுப்பேற்று நடத்திவந்த ஆரம்பக் கல்வியை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு ஒப்படைப்பதன்மூலம் அவைகளுக்கு ஒரு பெரிய பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. சமுதாய நலத் திட்டம், தேசிய விஸ்தரிப்புத் திட்ட வேலைகளிலும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் பொறுப்பேற்று நடத்தவேண்டும் என்ற ஒரு கொள்கையும் இந்தச் சபையினால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. அப்படியிருக்க, அந்த மசோதாவின் முதல் பிரிவில் "**may**" என்ற வார்த்தை சந்தேகத்திற்கு இடம் தரக்கூடியதாக இருந்து, "**with the consent**" அதாவது "சம்மதித்தால்" என்ற விதத்தில் இருந்து, அதுவும் மாற்றப்பட்டிருக்கிறது. ஆனால், இப்பொழுது இந்த 66-வது ஷரத்திலே, சர்க்கார் புதிதாகக் கொண்டுவந்திருக்கும் திருத்தத்திலே, "**The Government shall as soon as . . .**" என்று இருக்கிறது. ஏற்கெனவே "**may**" என்று இருந்ததைத் எடுத்துவிட்டு இப்பொழுது "**shall**" என்ற வார்த்தை போடப்பட்டிருக்கிறது. அது மிகவும் வரவேற்கத்தக்கது. "The Government shall as soon as may be after the constitution of a panchayat union council for a panchayat development block . . ." என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அமைக்கப்பட்ட பிறகு "கூடிய கால அளவில்" என்று சொல்லப்பட்டிருப்பதில் "கூடிய கால அளவில்" என்பது வியக்தமாக இல்லை. கால அளவு குறிப்பிட்டால் நலமாக இருக்கும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். ஒரு வருஷமோ, ஆறு மாதங்களோ என்று ஏதாவது ஒரு கால அளவு குறிப்பிடப்பட்டால் நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : ஐயா, இப்பொழுது அரசாங்கம் கொண்டுவந்திருக்கும் இந்தத் திருத்தம் மிகவும் வரவேற்கத்தக்கதுதான். அமைச்சரவர்கள் கூறியதுபோல், "**may**" என்று இருந்திருக்கு

27th September 1958] [Sri M. P. Subramanyam]

மேயானால், அது ஒரு நிச்சயமான காலத்தைக் குறிக்காது என்ற காரணத்தால், உறுதியளிக்கும் முறையில் "உடனடியாக" என்று இருப்பது நல்லது. குறைந்தது ஆறு மாத காலமாவது கடத்திவிட முடியும் இப்பொழுது இருக்கும் திருத்தத்தின்படியும் என்றாலும், அவ்வளவு காலம் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. கூடுமான வரை நிர்வாக இயந்திரத்தை வைத்துக்கொண்டு எவ்வளவு விரைவிலே பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு இந்த நிர்வாகத்தை மாற்ற முடியுமோ அவ்வளவு விரைவில் மாற்றப்படும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

சமுதாய வளர்ச்சித் திட்டங்களையெல்லாம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலமாக செயல்படுத்தும் நேரத்தில், தேசீய விஸ்தரிப்புத் திட்டத்திற்காக செலவு செய்யக்கூடிய அத்தனை பணங்களையும், எந்த எந்த தலைப்புக்களில் எவ்வளவு செலவழிக்கவேண்டும் என்ற ஒரு பொது விதி இருக்கிறது. கல்வி, சிறிய நீர்ப்பாசனம் போன்ற ஒவ்வொரு தலைப்பிலேயும் இவ்வளவு செலவழிக்கவேண்டுமென்று விதித்திருக்கிறார்கள். அதன்படித்தான் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் பணம் செலவு செய்யவேண்டுமா? அல்லது அந்தந்த வட்டாரத்தில் உள்ள தேவைகளை உணர்ந்து அதற்குத் தக்க விதத்தில் செலவு செய்ய உரிமை அளிக்கப்பட்டிருக்கிறதா? இப்பொழுதிருக்கும் திட்டத்தின்படி ஒரு தலைப்பிலிருந்து மற்றொரு தலைப்புக்குப் பணத்தைச் செலவிடுவதற்கு, சில குறிப்பிட்ட தலைப்புகளைப் பொறுத்தமட்டில் கலெக்டருக்கு அதிகாரம் இருக்கிறது. அப்படிக் குறிப்பிட்ட தலைப்புகளைத் தவிர மற்றவைகளுக்கு அதிகாரம் இல்லை. சில தலைப்புகளுக்கு மாற்றம் செய்யவேண்டுமானால் அதற்கு அரசாங்கத்தின் தனி அனுமதி வேண்டும் என்று விதி இருக்கிறது. அதனால், பல திட்டங்களை நிறைவேற்ற முடியவில்லை என்பது அனுபவபூர்வமான உண்மை. எழெட்டு மாதங்களுக்கு முன் ஒரு குறிப்பிட்ட தலைப்பிலிருந்து வேறொரு தலைப்புக்கு மாற்றவேண்டுமென்று அரசாங்கத்திற்குத் தகவல் வந்திருந்தும், அதற்கு உடனடியாக பதில் கிடைக்க முடியாத காரணத்தால், அந்த வேலை நிறுத்தப்பட்டிருக்கிறது. அரசாங்கம் பொதுவாக திட்டம் போட்டிருக்கலாம். இன்ன துறையிலே இந்த வளர்ச்சி ஏற்படவேண்டுமென்று வரைந்திருக்கலாம் என்றாலும் ஒவ்வொரு வட்டாரத்தின் தேவைகளை உணர்ந்துதான் செலவு செய்யவேண்டியிருக்கிறது. சில இடங்களில் கல்விக்கு அதிகம் செலவு செய்ய வேண்டிய அவசியம் இல்லாமல், சிறிய நீர்ப்பாசனத்திற்காகச் செலவிட வேண்டிய அவசியம் இருக்கலாம். மற்ற பகுதிகளிலே ஒரு துறையிலே வளர்ச்சி அடைந்திருக்கும் காரணத்தால், அந்தத் துறையிலே இருக்கும் பணத்தை எடுத்து வேறு துறையிலே செலவிடவேண்டிய அவசியம் ஏற்படலாம். அவைகளுக்குகெல்லாம் ஏற்ற வகையிலே எல்லாவற்றுக்குமே சர்க்காருடைய அனுமதி பெறவேண்டிய அவசியம் இல்லாமல் கலெக்டருக்கோ பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கோ அதிகாரம் அளித்துவிட்டால் ஒரு தலைப்பிலிருந்து மற்றொரு தலைப்புக்குப் பணத்தைச் செலவிடுவதற்கு வசதியாக இருக்கும். அந்த அதிகாரம் இருக்க வேண்டியது அவசியம். அவைகளையெல்லாம் இந்தச் சட்டத்தின் மூலமாக செய்வது அவசியம் இல்லையென்றாலும், இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்குத் தகுந்த முறையிலே இந்தச் சட்டத்தின்கீழ் விதிகள் இயற்றப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடிக்கின்றேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் பேசும்போது, இப்பொழுதிருக்கும் பிளாக் அட்வைசரி கமிட்டிகள் இனி என்ன ஆகும் என்று கேட்டார்கள். இப்பொழுது முழு அதிகாரமும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்குக் கொடுக்கப்படுகிறது. General Purposes Standing Committee இருக்கிறது. அது வேண்டுமானால் இது விஷயத்தைக் கவனிக்குமே தவிர, பூரண அதிகாரமும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்குத்தான் இருக்கும். சமுதாய நலத்திட்டம், தேசிய விஸ்தரிப்புத் திட்டம் எப்படி நடத்தப்பட வேண்டுமென்பதை

[Sri C. Subramaniam] [27th September 1958

நிர்ணயிப்பதற்கு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அதிகாரம் எடுத்துக் கொள்ளும்போது அதற்குமேல் பிளாக் அட்வைசரி கமிட்டிக்கு அவசியம் இருக்காது.

அதற்கடுத்தபடியாக, இங்கு செலவு செய்யக்கூடிய பல்வேறு இனங்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகைகள், அதன் பிரகாரமே செலவழிக்கப்படவேண்டுமா, அல்லது வேறு விதமாக மாற்றியமைத்துக்கொள்ள முடியுமா என்பதைப்பற்றி சர்க்கார் கருத்தைத் தெளிவுபடுத்தும்படி கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். பி. சுப்ரமண்யம் அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடத்தில் ஒப்படைப்பதற்கு ஒரு முக்கிய காரணம் அந்தந்தப் பகுதியிலே இருக்கும் நிலைமையை அனுசரித்து, வேண்டுமானால் இந்தத் திட்டங்களை மாற்றியமைப்பதற்கு ஒரு அதிகாரம் கொடுக்க வேண்டும் என்பதற்காகத் தான். ஆனால், இது நாம் மட்டும் முடிவு செய்ய வேண்டிய விஷயம் அல்ல, .மத்திய அரசாங்கம் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. சில திட்ட அடிப்படைகளைக் கட்டாயம் நிறைவேற்றியாகவேண்டும், அவைகளை விவாதித்து இந்தத் திட்டங்களை மாற்றியமைக்கும் அதிகாரம் இந்தக் கவுன்சிலுக்குக் கொடுக்கவேண்டும் என்ற முறையிலேதான் இந்தப் பொறுப்புக்களெல்லாம் யூனியன் கவுன்சிலிலே ஒப்படைப்பது என்று முடிவு செய்திருக்கிறோம். ஆகவே, நடைமுறையிலே எந்த எந்த இனங்களை மாற்ற முடியும், எந்த எந்த இனங்களைக் குறிப்பிட்டபடியே செலவழிக்கவேண்டும் என்பதைப்பற்றியெல்லாம் நடைமுறையிலேதான் நிர்ணயம் செய்ய முடியும். அதற்காகத்தான், "சர்க்கார் விதிக்கின்ற கண்டிஷன்களுக்கு உட்பட்டு இதை அமுலுக்குக் கொண்டுவரவேண்டும்" என்ற திருத்தம் இதிலே கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், இப்பொழுது இருப்பதிலே, நடைமுறையிலே என்ன என்ன திருத்தங்கள் செய்யவேண்டும் என்று திட்ட அடிப்படையிலே கூட செய்ய வேண்டியதைச் செய்துகொள்ளலாம் என்று சொல்லி இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

The Government amendment was put and carried.

DEPUTY SPEAKER : As there are no amendments to clauses 67, 68 and 69, I shall put them to the vote of the House.

Sri M. S. Selvarajan rose to speak.

As the hon. Member wants to speak, these clauses can be taken up for discussion on Monday, the 29th instant.

The House will now rise for lunch and meet again at 3-15 p.m.

The House then adjourned.

**[After lunch—3-15 p.m.]**

(Mr. Speaker in the Chair.)

(2) THE MADRAS GENERAL SALES TAX (AMENDMENT) BILL, 1958
(L.A. BILL NO. 34 OF 1958).

MR. SPEAKER : Now we shall consider the Madras General Sales Tax (Amendment) Bill, 1958.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, I move—

'That the Madras General Sales Tax (Amendment) Bill [a], 1958 (L.A. Bill No. 34 of 1958), be taken into consideration.'

---

a Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 23rd September 1958.